A

# SUPPLEMENT TO THE TAMIL TEXT

FOR THE

# MATRICULATION EXAMINATION

OF

**1884.**

CONTAINING

KAMBARAMAYANAKKARUPPORUL

*THARUPPANAM*

AND TRANSLATIONS OF IDIOMATIC PHRASES AND SENTENCES, AND VERSES FROM VARIOUS STANDARD AUTHORS

BY

C. PURUSHOTHAMA MUDALIAR,

*Asst Master, A. V. High School, Triplicane, Madras*

**Author of**

**BALA DRAVIDA BASHA CHANDRIKA**

AND

*The Tamil Text for the Matriculation Examination of* 1884.

A NEW EDITION

MADRAS.

PRINTED AT THE "MEMORIAL PRESS," No 39

1884.



*Price As. 3*

# PREFACE

'he object in giving publicity to this little book, upply a want in Tamil which has long been felt amil students generally, and particularly going up for the University Examinations. tioned in my 1st notice (regarding the Text 28th November last, I tried my best to make this a new book of its kind in the Tamil language, but unfortunately, pressure of work and the small price fixed upon each copy of this book have prevented me from making it larger and adding some more new models.

The principles upon which this has been based, are such as are always touched upon by the Examiners of the University in their papers, and so, it is believed it will meet the requirements of those for whom it is intended.

The latter part of the work consists of the translations of idiomatic phrases, sentences and proverbs into English, together with the translations of Tamil verses from different standard authors. In conclusion I offer my warmest thanks to the Madras University for having given me an occasion to publish the Tamil Text for Matriculation 1884 and also to publish this supplement, by distinctly specifying *my* edition of K. R. K. Porul as one of the Tamil Texts for the ensuing Matriculation Examination.

*20th August* 1884.
TRIPLICANE.

C. P. M.

[illegible]

13-9-54

என்றதால் கம்பநாடர் செய்த இராமாயணத்தின் கருப்பொருளை நன்றாக விளக்கிக் காட்டும் (உருவங்காட்டிபோன்ற) நூலாம். எனவே "தருப்பணம்" என்பது இந்நூலுக்கு உவமையாகுபெயரும் இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயருமாகவுங் காண்க. அன்றியும் கருப்பொருளுக்குத் தருப்பணம் என நான்காம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடராகவாயினும், கருப்பொருளினது தருப்பணம் என ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராகவாயினுங் கொள்க. தருப்பணம் என்றால் கண்ணாடி. இனி இந்நூலுக்குச் சார்பிடமாயுள்ள கம்பராமாயணக் கருப்பொருளின் தன்மையையும் அதற்கு ஆதியாய் வடமொழியிலுள்ள ஸ்ரீமத் இராமாயணத்தின் தன்மையையும் சற்று விசாரிப்போமாக.

ஸ்ரீமத் இராமாயண சரிதையானது பூர்வம் பிரமனால் நாரதமகரிஷிக்கு உபதேசிக்கப்பட்டதென்றும், பின்னர் அவர் அதை வான்மீகமுனிவருக்கு உபதேசித்தனரென்றுந் தெரிய வருகிறது. இவ்வான்மீக முனிவர் இச்சரிதையை தேவபாஷையில் (சுலோகம் என்னும்) செய்யுள் ரூபமாகச் செய்தனர். செய்யுள் என்பது இவரால்தான் முதல் முதல் அமைக்கப்பட்டதெனக் காணப்படுகிறது. இவ்வாறு இச்சரிதையானது வடமொழியில் முதல் பிரமனாலும், பிறகு வான்மீகியா

லும் அதன்பின்னர் போதாயனன் என்பவராலும் செய்யப்பட, பிரமன் அறிவித்தபடி யுணர்ந்த வான்மீகிசெய்ததை யநுசரித்துக் கம்பநாடர் தமிழ்ப்பாஷையிற் செய்தனரென்பதும் 'இக்கருப்பொருள்' என்பது அதன் சங்கிரகமென்பதும் யாவருமறிந்தவிஷயமே.

இச்சரிதைக்கும் இதைப்போன்றவற்றிற்குங் காப்பியம் அல்லது காவியம் எனப்பெயர்.

**காவியம்**—என்பது கடவுள்வாழ்த்து அல்லது தெய்வ வணக்கமென்பதை முதலிற் சொல்லப்பெற்று, அறம்பொருளின்பம் வீடு என்றநான்கு புருஷார்த்தங்களையடையு மார்க்கத்தைக்குறிப்பதும், * 2. ஒப்பும் உயர்வுமிலாத தலைவனையுடையதும், 32. கடல்வளம், 41. மலைவளம், 1. நாட்டுவளம், 1. நகரவளம் என்பனவற்றின் வருணனைகளையும் 59. சூரிய சந்திரர்களின் வருணனைகளையுமுடையதும், 12. திருமணம்புணர்தல், பொன்முடிகவித்தல், 51. மந்திராலோசனை செய்தல், 59. தூதுவிடுத்தல் 2. புதல்வரைப்பெறுதல் முதலியனவுஞ் சொல்லப்பெற்றுள்ள நூலாம்.

இத்தன்மைய இக்காவியம் அளவிறந்த விஷயங்களை யுணர்த்துவதாகலின் இன்னவிடத்தில் இன்னவிஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவென்று யாவரும் எளிதிலுணரும்பொருட்டு, கண்டிக்கப்பட்டது அல்லது பிரிக்கப்பட்டது எனப்பொருள் தரும் காண்டம் என்னுங் காரணப்பொதுப்பெயரினையுடைய ஏழுபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்க

---

*2. கம்பராமாயணக் கருப்பொருளில் இவ்வெண்ணுள்ள செய்யுளில் இவ்வளம் சொல்லப்பட்டிருக்கிறது என்பதைக் குறிக்கின்றது. மற்றவற்றிற்கும் இவ்வாறே. இது சங்கிரககாவிய மாதலால் இத்தன்மையான வளங்களின் வர்ணனைகளைக்காட்டும் விதமாக அவை ஆங்காங்கு இரண்டொரு சொற்களால் சொல்லப்பட்டிருக்கின்றன.

ன்றது. அப்பிரிவுகள் பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரண்யகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம், உத்தரகாண்டம் என்பன. இவற்றில் கம்பநாடரால் இயற்றப்பட்ட முதல் ஆறுகாண்டங்களும், முறையே 23, 12, 11, 14, 15, 38, உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இப்பிரிவுகளி லொவ்வொன்றிற்கும் படலம் எனப்பெயர்.

படலம்.—என்பது ஒருவிருக்ஷத்தின் கிளைகள் பலவாயினும் அடிமரம் ஒன்றாயிருத்தல்போல் பலபொருட்கள் அல்லது விஷயங்கள் கலப்பினும் ஒருமுக்கியமான விஷயத்தையே குறிக்கும் நூலின் பாகமாம். கம்பராமாயணக் கருப்பொருளாகிய அந்நூல் மேற்சொல்லிய விவரண கிரந்தத்திலுள்ள செய்யுட்களுக்கு நூற்றுக்கொன்றாகச் செய்யப்பட்டதுபோலிருத்தலால் முற்சொல்லிய பிரிவுக ளனைத்தையும் இங்கு சொல்ல தவசியமாகக் காணப்படவில்லை யாயினும் அவற்றுட் பெரும்பிரிவுகளைப் பற்றி மாத்திரம் சற்று வரைவோம்.

I. An abstract of each of the six great divisions of K. R. K. Porul. ஒவ்வொருகாண்டத்திலு முள்ள முக்கியமான விஷயங்கள்.

(1) பாலகாண்டம்.—[கம்பராமாயணக் கருப்பொருளின் 1-வது செய்யுள் முதல் 13-வது செய்யுள்வரையில்.] இக்காண்டத்தில், திருவயோத்தியின் ஆறு, நகர முதலியவற்றின் வளமும் அதற்கு இறைவனாகிய தசரத சக்கரவர்த்தியின் புகழும், இவர் புத்திரகாமேஷ்டியாகஞ்செய்த பின்னர் ஸ்ரீராம லக்ஷ்மண பரத சத்ருக்நர்கள் அவதரித்ததும், ஸ்ரீராமபிரான் கௌசிகமுனிவனோடு காட்டுக்குச் சென்று தாடகையை மடித்து முனிவன் யாகத்தை முடித்ததும், அகலிகையின் கல்லுருவை நீக்கிப் பழைய நல்லுருவாக்கியதும், மிதிலையிற் சனகன் வைத்திருந்த வில்லைமுறித்து அவன் மன

மகிழச் சானகியை மணம்புரிந்ததும், பரசுராமன் வில்லை வளைத்து அயோத்திக்குச் சென்றதும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(2) அயோத்தியாகாண்டம்.—[க. இ. கருப்பொருளின் 14-வது செய்யுள் முதல் 24-வது செய்யுள்வரையில்.] இக்காண்டத்தில், பரதசத்துருக்கனர்கள் கேகயநாட்டுக்குச் சென்றதும், ஸ்ரீராமபிரானுக்காக யுவராஜ்யாபிஷேகவாலோசனையும், அவர் சிறியதாயால் காட்டுக்குச்சென்றபின் அதன் காரணமாகச் சக்கரவர்த்தி உயிர்துறந்தமையைக் கேள்விப்பட்டு வந்த பரதன், தமயனைத்தேடிச் சித்திரகூட பர்வதத்தண்டை அவரைக்கண்டு அவரது பாதுகையைப்பெற்று அயோத்திக்குச் சென்றதும், ஸ்ரீராமபிரானும் அப்பர்வதத்தினின்றும் நீங்கி தண்டகாரண்ணியத்திற் பிரவேசித்ததும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(3) ஆரண்ணியகாண்டம்:—[க.இ. கருப்பொருளின் 25-வது செய்யுள் முதல் 35-வது செய்யுளின் முதலடியுட்பட.] இக்காண்டத்தில், விராதன் வதையும், சரபங்கரிஷிக்கு மேல்நாடாகிய வானாடுதந்து ரக்ஷித்ததும், பஞ்சவடி தீரத்திற் சூர்ப்பநகையைச் சிக்ஷித்ததும், கரதூஷணாதியரைப் பாணத்தாற் பக்ஷித்ததும், மாரீசனுருவால் ஸ்ரீராமலக்ஷ்மணரினின்றும் பிரிக்கப்பட்ட சீதாபிராட்டியைப் பன்னசாலையோடு இராவணன் எடுத்துப்போயினதும், அதைத்தடுத்த ஜடாயுவை அவன் மடித்துப்போயினதும், அயோமுகியைத் தண்டித்துக் கபந்தனுக்கு விண்ணுலகும் சபரிக்கு ஆசார்யபதமுந் தந்ததும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(4) கிஷ்கிந்தாகாண்டம்—[க.இ. கருப்பொருளின் 35-வது செய்யுளது இரண்டாவது அடி முதல் 42-வது செய்யுளின் முதலிரண்டு அடிகள் உட்பட.] இக்காண்டத்தில், ஸ்ரீராமலக்ஷ்மணர் பம்பாநதிக்கரையில் வந்ததும், அநும

னுல் சுக்கிரீவனை நட்புக்கொண்டதும், மராமரங்களைத் துளைத்ததும், துந்துபியினுடலை யாகாயத்திலெற்றியதும், வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்குப் பட்டங்கட்டியதும், பிராட்டியைத் தேடிக்கண்டுபிடிக்கும்படி சென்ற அநுமான் ஒரு பிலத்திற் பிரவேசித்த பிலத்தினின்றும் வெளிப்பட்டு மகேந்திரமலையை யடைந்து அங்கு சம்பாதியினுல் பிராட்டி யிலங்கையிலிருப்பதையறிந்துகொண்டதும், சொல்லப்பட்டிருக்கின்றன.

(5) சுந்தரகாண்டம்.— [க. இ. கருப்பொருளின் 42-வது செய்யுளின் கடையிரண்டடிமுதல் 49-வது செய்யுளின் முதலிரண்டடிகள் உட்பட.] இக்காண்டத்தில், அநுமான் இலங்கைக்குப் போகும்படி கடலைத் தாண்டுகையில் வழிமறித்த சாயாக்கிரகி, சிம்மிகை, முதலிய இராக்ஷஸிகளை மடித்ததும், இலங்கணியின் காவற்றொழிலை முடித்ததும், அசோகவனத்திலுள்ள பிராட்டியைக்கண்டு கணையாழியைத்தந்து சூடாமணியைக் கொண்டதும், பின்பு அசோகவனத்தை யழித்ததும், சம்புமாலி பஞ்சசேநாபதிகள் ஆகிய இவர்களை வதைத்து நாகபாசத்தாற் கட்டுண்டதும், இலங்கையை யெரியூட்டியதும், பின்னர் ஸ்ரீராமபிரானிடத்து வந்து சூடாமணியைத் தந்து இலங்கையில் நிகழ்ந்ததை யகமகிழ்ந்து புகன்றதும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(6) உயுத்தகாண்டம்:— [க. இ. கருப்பொருளின் 49-வது செய்யுளின் கடையிரண்டடிமுதல் 100-வது செய்யுள்வரையில்.] இக்காண்டத்தில், ஸ்ரீராமபிரான் வானரவீரர்களுடன் தென்சமுத்திரக் கரை சேர்ந்ததும், இலங்கையை அயனும் மயனுமாகப் பழையபடி நிருமாணித்ததும், இராவணன் செய்த மந்திராலோசனையும், விபீஷணன் சரணடைந்ததும், வருணனடிபணிந்ததும், சேதுபந்தனஞ்செய்து இலங்கையையடைந்ததும், சுக்கிரீவன் இராவணனோடு மற்போர்செய்து அவன் மகுடபங்கப்படுத்தி அவற்றின் உச்சியிலமு

த்தியிருந்த மணிகளைக் கொணர்ந்ததும், அங்கதன் தூதும், கும்பகர்ணனும் மூலபலமும் இந்திரஜித்து முதலாயினோரும் இராவணனும் மடிந்ததும், பிராட்டியை யநுமன் அழைத்து வந்ததும், கற்பின் திறத்தைக்காட்டலும், ஸ்ரீராமபிரான் சீதாசமேதனாய் மற்றெல்லாரோடும் திருவயோத்திக்குச் சென்று மகுடாபிஷேகஞ் செய்துகொண்டதும் சொல்லப்பட்டிருக்கின்றன.

[ஏழாவது காண்டமாகிய உத்தரகாண்டத்தில், உத்தரதிக்கிலுள்ள சத்தரிஷிகளும் வடமதுரையிலுள்ள லவணாசுர சம்மார நிமித்தம் ஸ்ரீராமபிரானிடத்தில்விண்ணப்பஞ் செய்தலும், சத்ருக்நன் அவ்வசுரனைச் சம்மரித்ததும், ஸ்ரீராமபிரான் பதினோராயிரவருஷம் அரசாண்டது முதலியனவும்சொல்லப்பட்டிருக்கின்றன.]

II. The object of (or result by) reading this book. இக்காவியத்தை வாசித்தலின் கருத்து:— இதனை வாசித்தல் விநோதமாய்க் காலங்கழிப்பதற்கல்ல. மற்றென்னையெனில் "அறம்பொருளின்பம் வீடடைதனூற்பயனே" என்றபடி-இதனாற் கற்பிக்கப்படும் 1 அறம், 2 பொருள், 3 இன்பம், 4 வீடு, என்னு நான்கு புருஷார்த்தங்களையும் அடையும் வழியையறியும்பொருட்டாம்.

III. Moral excellences of certain characters. ஒழுக்கச்சிறப்பினைப்பற்றி.—

" 'Tis from high life high characters are got."

Shakespeare.

(a) ஸ்ரீராமபிரான்.—1 இவர் சத்தியம், தயை, சாந்தம், உறுதி, தவ முதலிய நற்செயல்களாகிய மணிக்கூட்டங்களை அவற்றின் உயர்வை அறிவிக்கும்பொருட்டு, தனது

அவதாரமாகிய சாணைக்கல்லில் தீட்டிக் காட்டவந்தவர். 2 தனது சிறியதாயின் வாக்கியப்படி யுவராஜ்ய பட்டாபிஷேகத்தைத்துறந்து, திருமுகத்தில் வாட்டமின்றி * காட்டுக்குச்சென்றனர். 3 தான் சித்திரகூட பர்வதத்தண்டை யிருக்கையில், மகுடாபிஷேகத்தின்பொருட்டுத் தன்னை மறுபடி யயோத்திக்கு அழைத்துப்போகும்படி பந்துமித்திரர்முதலாயினோரோடு வரும் பரதாழ்வானைக்கண்ட இலக்ஷுமணன், "பரதன் தேவரீரோடு போர்செய்ய வருகிறதுபோ லிருக்கிறது" என்றதைக் கேள்வியுறுகையில் அவரவரது குணாகுணங்களைஉள்ளபடி சூக்ஷுமமா யறிந்திருப்பவராதலால் இலக்ஷு

---

* The following extract will shew how Rama was liked by his people, and what sort of feelings they entertained at his departure to the wilderness with his wife and brother.

"The Rose of women rose and took her seat
And Rama next and Lakshman true and bold,
Sprang on the sun-bright chariot deckt with gold,
Sumantra, mounted, urged each willing steed,
Of noble lineage, like the wind for speed.
Then rose to heaven one universal shriek ;
And the whole city, old, young, strong, and weak,
Rusht toward the car as, from the scorching sun,
The panting herds to shaded water run.
Before the chariot and behind they hung,
And cried, with weeping eyes, as there they clung :
"O check thy steeds ; drive slower, we implore ;
And let us see our Rama's face once more.
His mother's heart is, surely, barred with steel,
Or it had broken with the pangs we feel.
Sita, Well done ! Videha's flower and pride,
Still, like his shadow, by thy husband's side :
Cheering his path with thy loved presence still,
As the sun never sets on Meru's hill.
And thou, O Lakshman, shalt have honor too,
Serving thy brother with a love so true."

மணனுக்குப் புத்திசொல்லி பரதாழ்வானது நற்குணங்களைப் பற்றி நிரம்பச்சொல்லினர். 4 தன்னையடுத்த சுக்ரீவனது குறைகளைநீக்கி அரசுதந்தனர். 5 விபீஷணன் தனது பகைவனது தம்பியாயினும் சரணடைந்ததால் அன்னோனை யங்கீகரித்துக் கடைசியில் இலங்கையரசுதந்தனர். 6 வருணன் தன் வேண்டுகோளை அலக்ஷியஞ் செய்ததற்காக அவனோடு போர் செய்ய எத்தனிக்கையில் அவன் வணங்கியதால் அவன்செய்த குற்றத்தை மறந்தனர். 7 இரக்கத்தால் இராவணனிடத்து அங்கதனைத் தூதனுப்பிப் புத்தி சொல்லுவித்தனர். 8 தனக்கு மிகத்துயரத்தை விளைத்த இவ்விராவணன் முதல் நாட்போரில் சதுரங்க சயின்யங்களையும் தனது கைகளிற் பிடித்த ஆயுதங்களையும் மகுடம் கவசமுதலிய யாவற்றையும் இழந்து வெறுங்கையனாகத் தரையில் நிற்கக்கண்ட கருணாநிதியாகிய ஸ்ரீராமபிரான் 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டும்' என்றிருப்பினும் இவனைக்கொல்ல இதே சமயமென்று நினையாமல் 'இராவண இப்போது நிராயுதனாகவும்மிகக் களைத்து மிருக்கின்றனை. இன்று நகரத்துக்குப்போய் சண்டைசெய்ய நாளைவா' என்றனர். [இவரிடத்துள்ள இத்தன்மைய வொழுக்கங்கள் பல. அவற்றை யின்னுஞ்சொல்லிற் பெருகுமாகையின் விடப்பட்டன.]

(b) இலக்ஷ்மணன்:—இவர் மாற்றாந்தாயினது பிள்ளையாயினும் தமயன் காட்டுக்குச்செல்வதை யறிந்தவுடன் தானும் அவர் பின்சென்று அவர் ஏவலின் வழி நின்றார். தமயனோடு காட்டிற்சென்றிருந்த பதினான்குவருட காலமும் அவர் ஏவலுக்குத் தடையுண்டாகுமென்று நித்திரை சோம்பல் முதலியவற்றையும் ஒழித்திருந்தனர். விபீஷணன்மீது இராவணன் விட்ட வேலாயுதத்தை, தங்களையடுத்தவனைக் காத்தல்வேண்டும் என்ற எண்ணத்தால் தன்மார்பில் ஏற்றுக்கொண்டனர்.

(c) பரதன்:—இவர் இராஜநீதியிலும் சிறந்தவர். பசுக்களுக்குப் புல்முதலியன போட்டு இதம்பண்ணிப் பாலைவிசேஷமாகக் கொள்வதுபோல் பயிரிடுதற்கு ஏர் எருது முதலியன இல்லாதவர்களுக்கு முன்பணங் கொடுத்துப்பயிரிடச் செய்து அதனைப் பின்னர் அவரிடத்துவாங்கும் ஆறிலொரு கடமையோடு சிறிது சிறிதாக வாங்கிவந்தனர். இவ்வாறு செய்த நீதியினின்றும் மாறுபடாத இராஜதந்திரங்கள் பலவால், பதினன்கு வருடகாலமாகத் தாங்கி யிருந்த இராச்சியபாரத்தைத் தனது தமயனது திண்டோளிற் சுமத்துகையில், சாகுபடி முதலியவற்றால் உண்டான வருவாய் முனனிலும் பத்துப்பங்கு அதிகமாயிருந்தது. தனது தமயன் நாட்டின்கண் வாழ்வைத் துறந்திருந்த காலமுழுமையும், தானும் இராஜபோகத்தைத் துறந்து அயோத்திக்குத் தென்மேற்கிலுள்ள நந்திக்கிராம மென்னு மிடத்திலிருந்து, அறுசுவையுண்டியை நீக்கிப் புல்லாற்செய்த படுக்கையையுடையவராய் தமயனது பாதுகையை வணங்கிச்சுமந்திரன் என்னு மந்திரியைக்கொண்டு இராச்சியபரிபாலனஞ் செய்துவந்தனர்.

(d) சத்ருக்நன்:—ஸ்ரீராமபிரானிடத்துப் பக்தியுள்ள பரதனிடத்து மிகப்பக்தியுள்ளவர். மற்றவர்களைப்போல் பஞ்சேந்திரியங்களாகிய யானைகளை அறிவென்னும் அங்குசத்தால் அடக்கி நடத்துபவர்.

(e) அநுமான்:— இவர் பஞ்சேந்திரியங்களை வென்றவர். பிராட்டியைத் தேடும்படி தனக்கு விதிக்கப்பட்ட காரியத்தை மனஞ்சலியாமல் மனப்பூர்த்தியாய்ச் செய்தவர். ஸ்ரீராமபிரானது திருநாமத்தையே மந்திரமாகவும் நற்றுணையாகவுங் கொண்டு 'செயற்கரிய செய்வார் பெரியர்'என்றபடி எக்காரியத்தையுஞ் செய்பவர். ஆபத்துகாலத்தில் தன் பிராணனைத் துரும்பாக வெண்ணி யுதவிசெய்பவர். இராவணன் விபீஷணன்மேல் விட்ட, யாவராலும் தடுக்கமுடி

யாத வேலாயுதத்தைத் தன்மார்பிலேற்கும்படி அதற்கு நேராக நின்றவர். பக்தி நீதி முதலியவொழுக்கங்களிலும் ஸ்ரீராமபிரானுக்குத் தொண்டுசெய்வதிலும் சிறந்தவர்.

(f) விபீஷணன்:—இவர் இராக்ஷதகுலத்திற் பிறந்திருந்தும் நற்குண நற்செயல்களையுடைய பக்திமானுமாகவிருந்தார். பாற்சாதத்திற் பெய்த அகப்பைபோலும் வேதசாத்திரங்களைச் சொல்லளவில் மாத்திரம் வாசித்துள்ள தமயனாகிய இராவணனுக்குத் தான் பலநீதிகளைச் சொல்லியும் அவன் துர்க்குணம் மாறவில்லையாகையின் அவனைவிட்டு ஸ்ரீராமபிரானைச் சரணடைந்தனர்.

IV. Extra-ordinary strength, importance and miraculous deeds of some of the personages in the history-அவரவருடைய புஜபலபராக்கிரமும் அற்புதச்செயல்களும்.

(a) ஸ்ரீராமபிரான்:—இவர், தான் மிதிலைக்குச் செல்கையில் வழியில் கல்லுருவா யிருந்த அகலிகையைத் தனது பாதபரிசத்தாற் பழையபடி சுந்தரமுள்ள பெண்ணுருவடையும்படி செய்தனர். சிறுவயதிலேயே கௌசிகமுநிவனது யாகத்தைக் காத்தபோது, ஆயிரம் யானை பலமுள்ள தாடகையை மடித்தனர். மிதிலையில் ஜனகராஜனது கட்டளைப்படி ஐயாயிரமல்லர்களால் எட்டு இருப்புச்சக்கர முள்ள வண்டியி லிழுத்துவரப்பட்ட வில்லை முறித்தனர். பரசுராமன் தந்த வில்லையும் வளைத்தனர். கரதூஷணதிரியசை வென்றனர். துந்துபியென்னும் இராக்ஷதனது மலைபோன்ற தேகத்தைத் தனது பாதத்தின் பெருவிரலால் ஆகாயத்திற் செல்லும்படி செய்தனர். ஏழுமராமரங்களையும் ஒரே அம்பினால் துளைத்தனர். இராவணனை யிடுக்கியபடியே சத்தசாகரங்களிலும் ஸ்நானஞ்செய்தவாலியைக்கொன்று பிறகு மூல்பல முதலிய அளவிறந்த இராக்ஷத சேனையையும் இராவண கும்பகர்ணாதியரையும் வதைத்தனர். ஹுங்கார சத்தத்தால்

இராவணன்விட்ட சூலத்தை வலியறச்செய்து நிலத்தில் விழுத்தினர்.

(b) இலக்ஷ்மணன்:—இவர் சாத்தற்றொழிலில் வல்லவர். பதினன்குவருஷகாலம் நித்திரை ஆகாரம் என்பன வற்றை யொழித்திருந்தனர். இந்திரனைச் செயித்தவனும் மாய்கைகளில் மிக வல்லவனுமாகிய இந்திரஜித்தை, வென்றனர்.

(c) பரதன்:— இவர் கந்தர்வலோகத்திற் சென்று அவர்களை வென்றனர்.

(d) சத்ருக்நன்:—இவர் வடமதுரையில் உருத்திரனுடைய சூலத்தை ஆயுதமாகப் பெற்று, தேவர் முநிவர்களை மிக்கதொந்தரை செய்துகொண்டிருந்த லவணசுரனேடு போர்செய்து வெற்றிபெற்றனர்.

(e) அநுமான்:—இவர், மலையாள சமுத்திரக்கரையோரத்திலுள்ள மயேந்திர பர்வதத்தினின்றும்கிளம்பி ஆகாயமார்க்கமாய் இடையிலுள்ள சமுத்திரத்தை அநுயாசமாகக் கடந்து சென்றனர். சுரசை, சாயாக்கிரகி இலங்கணி என்னும் இராக்ஷதஸ்திரீகளையும, அக்ஷகுமாரன், சம்புமாலி, பஞ்ச சேனபதிகள் முதலியோரையுங் கொன்றனர். நெடுந்தூரத்திலுள்ள சஞ்சீவிபர்வதத்தைப் பலமுறைகொண்டுவந்தனர். சிறுவயதிற் சூரியனை மாங்கனியென்று அதைப் பறிக்கும்படி பாய்ந்தனர். இந்திரனது வச்சிராயுதத் தாலடிபட்டுஞ் சலியாத கன்னத்தையுடையவர்,

(f) வாலி:—இவன் மாயாவி துந்துபி யென்னும் மகா வல்லமையுடைய அசுரரோடு நெடுங்காலம்வரையில் ஓயாமற் போர்செய்து ஜெயித்தவன். தன்னுடைய குமாரனகிய அங்கதனுடைய தொட்டிலில் இராவணனைப் பத்துதலைப் பூச்சியென்று கட்டி வேடிக்கைகாட்டி யவன். இவ்விராவணனை பிடிக்கியபடியே சத்தசாகரங்களிலும்ஸ்நானஞ் செய்தவன்.

(g) இராவணன்:— இவன் கைலாயத்தைத் தூக்கியதோள்வலி யுடையவன். திக்குப்பாலகர்களோடு போர் செய்துவெற்றிகொண்டவன். எண்டிசையானைகளோடுபோர் செய்கையில் அவற்றின் கொம்புகள் தைத்த மார்பை யுடையவன்.

V. Justifying certain apparently unjust acts of Rama. நியாயமல்லாததாகக்காணப்படும் பின்வருஞ் செயல்கள் ஒவ்வொன்றும் இன்னஏதுக்களால் நியாயமே யென்று காட்டல்.

1. ஸ்ரீராமபிரான் தன்னைக் காந்தர்வ விவாகஞ்செய்து கொள்ளக் கேட்டுக்கொண்ட பெண்பாலாகிய சூர்ப்பநகையை மானபங்கஞ் செய்வித்ததற்கு நியாயம் வருமாறு:—

இவள் பாபத்தொழிலையே செய்யும் அரக்கியாகையாலும், தன்னுடைய விகார ரூபத்தை மறைத்து மாய்கையால் நல்லுருவந்தாங்கி மோசஞ்செய்யவந்ததாலும், ஸ்திரீகளுக்கு எப்போது மில்லாத சுவதந்திரத்தை மேற்கொண்டு புருஷர்களைப்போல வந்தமையாலும், ஸ்ரீராமபிரானும் இலக்ஷ்மணனுமாகப் பலமுறைசொல்லிய நீதியைக் கேளாமல் அங்கிருந்த பிராட்டியை, தனதுஇராக்ஷதத் தன்மையால் விழுங்கிவிட எத்தனித்ததாலும், "தன்னைக்கொல்லவருவது பசுவானாலுங்கொல்க' எனச்சாத்திரமிருந்தும்அவ்வாறு செய்வியாமல் அவள்தானுங் கெட்டுப் பிறரையுங் கெடுப்பதற்கு அங்கபூதமாயுள்ள நாசி, முதலியவற்றைப் பங்கப்படுத்துவித்துசிக்ஷித்தனர்.

2. (a) வாலி சுக்கிரீவர் என்னும் சகோதரர் இருவரும் சண்டை செய்கையில் ஸ்ரீராமபிரான் தான் பிரவேசித்தல், (b) மறைந்து நிற்றல், (c) அவ்வாறு நின்று வாலியின்பேரில் பாணத்தைவிட்டு வதைத்தல், ஆகிய இவற்றிற்குநியாயம்வருமாறு:—

(a) பூமியென்பது எங்கெங்குளதோ அப்பாகங்களெல்லாவும் இக்ஷுவாகுவர்கு சக்கரவர்த்திக்கு உரியனவாகையால் அவர் பிற்சந்ததியி லவதரித்த ஸ்ரீராமபிரானுக்கும் உரியதே. அன்றியும் அரசன் தனது குடிகளின் உடல், பொருள், முதலியவற்றைக் காத்துத் துஷ்டநிக்கிரகஞ் செய்யவேண்டிய கடமையை யுடையவனாதலாலும், "நீநாட்டின்கண் அரசனாக இரு, நான் காட்டின்கண் அரசு செலுத்துமாறுபோய் வருகிறேன்" என்று பரதனிடத்துச் சொல்லியதற் கிணங்கவும், இவ்வாறு சண்டைசெய்யும் இருவரில் சுக்கிரீவனுக்கு வாலிசெய்த அநியாயத்தை முன்னமேயே யறிந்திருப்பதாலும், தன்னையடுத்தவர்களது துயரைத் தீர்ப்பது தனது விரதமாதலாலும், தான் இடையிற் பிரவேசித்தனர்.

(b) மறைந்து நின்றதற்கு நியாயம் வருமாறு:—வாலியின் எதிரிற்போகும்பக்ஷத்தில், சமயத்தை யனுசரித்துவாலியும் தன்னைச் சரணடைந்தால் அவன் கருத்துக்கு இணங்க நேரிடும், அதனால் "உனக்கு அநியாயஞ்செய்த துஷ்டனை சிக்ஷிக்கிறேன்" என்று சுக்கிரீவனுக்குக் கொடுத்த வாக்குத் திறம்பும் என்பதாலும், துஷ்டனாயினும் சரணடைந்தால் காப்பாற்றலாகாதோ வெனில், துஷ்டர்கள் வேதாத்தியயனஞ் செய்யினும், சாந்திராயண முதலிய விரதமிருப்பினும் அவர்களை நம்புலாகாதென்பது கிழப்புலி ஓர்பிராமணனிடத்துச் செய்த் வஞ்சகம், உருத்திராக்ஷப் பூனையின் விருத்தி ஆகிய இவற்றால் அறியப்படுமாகையாலும், துஷ்டமிருகங்களைப் பிடிப்போரும் மடிப்போரும் மறைந்து நின்றே செய்வதியல்பாகையாலும், வாலி, அவனெதிரில் வந்துசண்டைசெய்பவரது பலத்திற் பாதி அவனுக்குச் சேரும்படி பெற்ற வரத்துக்குத் தன்னால் யாதொரு பங்கம் வராதிருக்கவும் மறைந்து நின்றனர்.

(c) அவனை மடித்ததற்கு நியாயம்:— அவன் வானர உருவமுடையவனாயினும் நன்மை தீமைகளைப் பகுத்தறிய

வல்லவனாதலால் மனிதனைப்போன்றவனே - இவ்வாறிருக்க, யாதொரு குற்றமுஞ் செய்யாத சுக்கிரீவனைக் கொல்லவேண்டும் என்னு மெண்ணத்தோடு அவனையடித்து அவன் ஓடித் தப்பியபடியால் விட்டும், அவன்மனைவியைத் தன்னுட்டிலேயே வைத்துக்கொண்டும், மறுபடி யிப்போதுசெய்யும் மல்லயுத்தத்தில் தம்பி சோர்வதைக்கண்டு சற்று மிரக்கமின்றி அவனைக்கொல்லவுந் துணிந்தமையாலும், அவன் மீது அம்பெய்து கொன்றனர்.

N. B. மேற்சொல்லியநியாயங்கள்பெரும்பாலும்இக்காவியத்தின்கருத்திற்கிணங்கியபடி சொல்லப்பட்டிருக்கின்றன.

VI. Different* names given to certain persons. அவரவர்களுக்குரிய பற்பல பெயர்கள்.

1. ஸ்ரீராமபிரான்:—தாசரதி, (இரகுநந்தனன்) இரகவன், சக்கரவர்த்தி திருமகன், காகுஸ்தன், கௌசல்யாநந்தவர்த்தனன், பரதாக்கிரஜன், கோதண்டபாணி.

2. சீதை—வைதேகி, மைதிலி, ஜானகி.

3. இலக்ஷ்மணன்—சௌமித்திரி, இராமாநுஜன், இளையபெருமாள்.

4. பரதன்—கைகேயியாநந்தவர்த்தனன். லக்ஷ்மணாக்கிரஜன்.

5. சத்ருக்நன்—சௌமித்திரி, பரதாநுஜன்.

6. அநுமான்— மாருதி, ஆஞ்சநேயன், கேசரிபுத்திரன்.

7. இராவணன்—தசக்கிரீவன், தசகண்டன், வைஸ்ரவணன்.

8. இந்திரஜித்து—மேகநாதன், இராவணி.

VII. Coincidence of facts etc. between this history and other histories of similar nature and comparing and contrasting the same. இந்த இராமசரித்திரத்திற்

கும், வேறு சில சரித்திரங்களுக்கும் உள்ள ஒற்றுமைகளும் பேதாபேதங்களும் இன்னவையெனச் சுருக்கிக் காட்டல்.

மேற்சொல்லியபடி எடுத்துக்காட்டத்தக்க சரித்திரங்கள் மூன்று. அவை அரிச்சந்திரபுராணம், பாரதம், நளசரித்திரம் என்பன. இவ்விராமசரித்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறபடி அம்மூன்று சரித்திரங்களிலும், சக்கரவர்த்திகளாயிருந்தவர்கள், சத்தியத்தின் பொருட்டு தம்தம் மனைவியரோடு நாடுகளைத்துறந்து காட்டிற்சென்றமையும், பிறகு மனைவியரைப்பிரிந்திருத்தல், இராக்ஷதர் வேற்றரசர் முதலாயினோரோடு போர் புரிந்துவெற்றிபெறல், பெரியோர்க்குத் துணைசெயல், அடுத்தவர்களை யாதரித்தல், தக்கார்நட்புக் கொளல், அவர் துணையால் ஜயமடைதல், பின்பு குறித்தகாலத்தில் நாடடைதல், திருமுடி புனைதல் முதலியன சொல்லப்பட்டிருக்கின்றன. (அச்சரித்திரங்களில் ஒன்றின்வரலாறு அடியில் சுருக்கிச்சொல்லப்பட்டிருக்கின்றது.)

☞ The following verses give the sense of the abstract of the adventures of Harischandra.

"Those plains where sweet Semiramis in splendid state,
The empress of the world all glorious sat;
Where he who conquered worlds did once deplore,
All having conquered could not conquer more,"
"Sometimes 't is grateful to the rich to try
"A short vicissitude and fit of poverty
"Without the stately, spacious room,
"The Persian Carpet or the Tyrian loom."

Dryden.

,r 'After heavy sorrow came more joyous days."

**அரிச்சந்திரன் சரித்திரம்.**— சத்திய விரதராகிய இச்சக்கரவர்த்தியும் சூரியவமிசத்திற்றோன்றிய சக்கரவர்த்திகளுள் ஒருவர். இவர், சத்தியமென்பது இன்னதெனக்காட்டவந்தவர். தனதாரநகர முதலியன கௌசிகமுனிவரால்

(இவர்மனோ நிலையையறியும்பொருட்டு) சூதாகக்கிரகிக்கப்பட்டனவாகையால் அம்முனிவருக்குத்தருவதாய்த்தான் வாக்குக்கொடுத்திருந்த இருநிதியஞ் சேகரிக்கப் பரதேசத்துக்குச் செல்லவேண்டி, இந்நாவைப் பழிக்குஞ்சுந்தரவதனச் சந்திரமதியெனு மனைவி, மைந்தன் உலகதாசன், மந்திரி சத்தியகீர்த்தி, என்பவர்களோடு இடையிலுள்ள காடு மலைகளின் வழியாகத் தன் பின்னனுப்பப்பட்ட தாருக்காரனாகிய நக்ஷத்திரேசன் என்னு மாயப்பிராமணன்செய்த அளவிலாவுபத்திரவங்களை யநுபவித்துக்கொண்டே போயினர். அப்படிப் போகையில் அம்முனிவாது மாய்கையால் எதிரில் வந்த அக்கினியாறு, துஷ்டமிருகங்கள் முதலியவற்றையுங் கடந்து காசிநகரத்தையடைந்து மேற்சொல்லியவாறு பொருள்சேகரித்து முனிவனுக்கு அனுப்பும்பொருட்டுத் தன் மனைவியையும் மைந்தனையுந்துறந்து தானும் இழிதொழிலை மேற்கொண்டு சொல்லொணுவுபத்திரவங்களையநுபவித்துஞ் சத்தியந்தவரு திருத்தலை யறிந்த முனிவன், மனநடுங்கி இன்னும் இவனைப்பரீக்ஷித்தால் எவ்வுலகமும் பொருதென்று கண்டு, தன் மாய்கைகள் யாவற்றையும் நீக்கிக்கொள்ள அச்சக்கரவர்த்திக்குச் சந்திராதித்தர்க ளுள்ளளவு மாறுத புகழ்கிடைத்தது. பழையபடி தன் நாடுமுதலியன பெற்று முடிதரித்து அரசுநடாத்தினர்.

Comparing and contrasting facts. ஸ்ரீராமபிரான் மாதுர்வாக்கிய பரிபாலனஞ்செய்யும்படி, இராச்சியத்தைத் துறந்து மனைவி, சோதரன், இவர்களோடு காட்டுக்குச்சென்றதுபோல், அரிச்சந்திரமகாராஜனும், தனது தந்தைக்கு அந்தரசொர்க்கந்தந்த முனிவன் பொருட்டுச் சென்றனராயினும், ஸ்ரீராமமூர்த்தி பதினான்கு வருடங் கழிந்தபிறகு தனது நாட்டிற்கு வருவது நிச்சயமாயிருந்தது. அரிச்சந்திரராஜனுக்கோ, மறுபடி நாட்டிற்கு வருவதென்பதே முதலில் ஏற்படவில்லை. இவ்வரசனுக்கு முனிவனது மாய்கையால் பற்

பலதுன்பங்கள் நேரிட்டன. அவ்வரசனுக்கோ இராக்ஷதர்களுபத்திரவமும் அவர்களிடத்துப் போரும் நேரிட்டன. இவ்வரசன் தன் மனைவியையும் மைந்தனையும் அடிமைகளாகவொருவனிடத்து விற்று அவ்வேதுவால் பிரிந்திருக்க நேரிட்டது. அவ்வரசனோ, தன்மனைவி இராக்ஷதவஞ்சனையால் தன்னையறியாமற் கொண்டுபோகப்பட அதனாற் பிரியும்படி நேரிட்டது. இவ்வரசனோ சத்தியம் என்னும் ஒப்பும் உயர்வுமிலா பாணத்தால், பகைவன்போன்ற விசுவாமித்திர முநிவன் விட்ட மாய்கையாலுண்டான உபத்திரவங்களென்னும் பாணத்தைத்தோற்கடித்துப் பழையபடி தனது மனைவி, மைந்தன், நாடு, நகர முதலியன பெற்றனன். அவ்வரசனோ பாணத்தாற் பகைவனை ஜயித்து மனைவி நாடு நகரமுதலியன வற்றையடைந்தனன்.

N. B. இவ்வாறே மற்றிரண்டு சரித்திரங்களுடனும் ஒப்பிட்டுப்பார்க்க. அவற்றையுஞ் சொல்லிற்பெருகு மாகையின் சொல்லாதுவிட்டோம். மேற்சரிதையை இன்னும் விசேஷமாய்ச்சொல்லினநீடிக்குமாகையின் சுருக்கமாய்ச் சொல்லினோம்.

## VIII. Inconsistency of facts between this history by *this author* and the same history by the sage *Valmiki*.

வடமொழியிலுள்ள வான்மீகராமாயணத்திற்கும், தமிழில் கம்பராற் சொல்லப்பட்ட இராமாயணம் அல்லது இச்சங்கிரக ராமாயணத்திற்கும் உள்ளபேதங்க ளின்னவையெனல்.

| வான்மீகராமாயணத்தில்: | கம்பராமாயணம் அல்லது இச்சங்கிரகராமாயணத்தில்: |
|---|---|
| (1) தசரத சக்கரவர்த்திக்கு 353 - மனைவியருண்டென்றும் அவர்களில் முக்கியமானவர் மூவரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. | (1) இச்சக்கரவர்த்திக்கு அறுபதினாயிரம்மனைவியரென்றும் இவர்களன்றி முதன்மையானவர்கள் மூவரென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. |

| | |
|---|---|
| (2) ஸ்ரீராமபிரான் மிதிலைக்கு வந்தபோது, திருமணத்துக்கு முன்னம் சீதாபிராட்டியைக்கண்டதாகச் சொல்லப்படவில்லை. | (2) திருமணத்துக்கு முன்னம் கன்னிகாமாடத்திலுள்ள பிராட்டியைச் சீராமபிரானும், ஸ்ரீராமபிரானைப் பிராட்டியுங் கண்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. |
| (3) சீதாபிராட்டியை இராவணன் தொட்டு எடுத்துப் போயினன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. | (3) சீதாபிராட்டியிருந்தபன்னசாலையோடு பெயர்த்து எடுத்துப்போயினன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. |
| (4) இந்திரஜித்தின் யுத்தகாலத்தில் மாயாஜனகனை யுண்டுபண்ணி யழித்ததாகச் சொல்லப்படவில்லை. | (4) மாயாஜனகனை உண்டுபண்ணிப்பிராட்டியின்முன் அழித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. |
| (5) விபீஷணன் இராவணனுக்குப் புத்திசொல்லுகையில் ஸ்ரீராமபிரானது பூர்வ அவதாரவிசேஷம் சொல்லவேண்டி இரணியனது சரித்திரம் சொன்னதாகக் குறிக்கப்படவில்லை. | (5) இரணியனது வரலாறு சொல்லப்பட்டிருக்கிறது. |
| 6. சுக்கிரீவன்காட்டிய துந்துபியின் தேகத்தை ஸ்ரீராமபிரானே தனது பாதத்தின்பெருவிரலால்எற்றி ஆகாயத்திற்கிளம்பச்செய்தனனென்று சொல்லப்பட்டிருக்கிறது. | (6) ஸ்ரீராமபிரான் தனது தம்பிக்கு ஆக்கியாபிக்க அவர், தனது பாதத்தால் எற்றினார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. |
| (7) இந்திரஜித்தின் யுத்தகாலத்தில் வித்யுஜ்ஜிவன் என்பவன் ஸ்ரீராமபிரானைப் போலவுரு வுண்டுபண்ணிச்சீதாபிராட்டி முன்னமழித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. | (7) சொல்லப்படவில்லை. |

N. B. மேற்சொல்லியவைப்போன்ற பேதங்கள் இன்னுமிரு க்கின்றன.

IX. Allusions. சந்தர்ப்பக்கதைகள்.

(a) சீதை பிறக்க இலங்கையழிந்ததெனல்:—பூர்வம்இப் பரதகண்டத்தின் தென்பாகத்தில் தவஞ் செய்து கொண் டிருந்த குசத்துவஜனென்னும் ஓர்மகரிஷியின் புத்திரியா கிய வேதவல்லி யென்னுமாது, தனக்குஸ்ரீமந்நாராயணனே கணவனாகவேண்டுமென நோன்பு நோற்றுக்கொண்டிருப்ப தைக்கண்ட இராவணன், தன்னை மணம்புரியும்படி வேண்டி யும் பிரயோஜனப்படாததால் பலவந்தமாக அம்மாதைக்கவ ர்ந்துபோக எத்தனித்தனன். இதைக்கண்ட ரிஷிபுத்திரி தன் முன் தீயைவளர்த்தி, "இராவணா உன்னைக்கொல்லுவிப்பத ற்கு யானேநிராப்பிணியாக மறுபடியும் அவதரிப்பன்" எனச் சொல்லி அக்கினியிற் பிரவேசமாயினள். பிறகு இம்மாது, சில காலஞ் சென்றபின், இலங்கையிலுள்ள ஓர் கேணியில் மலர்ந் திருந்த தாமரைமலரில் ஓர் சிறிய சிசுவாகத்தோன்றியிருக்க, இராவணனுக்குப் பூஜையின்பொருட்டுப் புஷ்பம்பறிக்கவந்த வனால் இவ்வற்புதம் வெளியாயிற்று. இதனைக்கண்ணுற்ற இராவணன், சோதிடர்களால் இச்சிசு இவ்வூரிலிருந்தால் அரசனுக்கு ஆகாதென்றறிந்தபின்னர், அதனையோர் பேழை யுள் வைத்துக் கடலில் விடுக்க அது அலைகளால் அடித்து வரப்பட்டு ஜனகாராஜனது பட்டணத்தருகில்கரைசட்டி மண லால் மூடப்பட்டிருந்தது. இது தெய்வத்தன்மையான சிசு வாகையால் ஆகாரமில்லாமல் உயிருடனிருந்தது. பின்பு யா கத்தின்பொருட்டு ஜனகராஜன் கடற்கரை யோரமாக உழு வித்தபோது அப்பெட்டிவெளிப்பட்டு ஜனகராஜனால் சீதை யென நாமகரண மிடப்பட்டது.

(b) இராவணகும்பகர்ண ஜனனம்.—ஓர்காலத்தில், பரம பதத்தின் துவாரபாலர்களாகிய ஜயன், விஜயன் என்னுமிரு வர் ஸ்ரீமகாவிஷ்ணுவின் ஆக்கினையை (துர்வாசமுநிவனுக்கு

அஞ்சி) கடந்ததால், அவர் இவர்களைத் தண்டிக்கும் பொருட்டு, தனக்கு விரோதிகளாக மூன்று ஜனனமாவது, பக்தர்களாக ஏழுஜனனமாவது பூலோகத்தில் எடுத்தல் வேண்டுமென்றனர். இவர்கள், விரோதிகளாகச் சனனமெடுக்கும் பக்ஷத்தில் மூன்று ஜனனத்தில் பரமபதம்கிடைக்கிறதென்னும் அநுகூலத்தை யெண்ணி அவ்வேற்பாட்டின்படி இரணியன், இரணியாக்ஷன்; இராவணன், கும்பகன்னன்; கஞ்சன், சிசுபாலன்; என்னும் பெயருடையவர்களாய் மூன்றுவிசை அவதரித்துக் கடைசியிற் பரமபதமடைந்தனரென்று தெரியவருகிறது.

(c) சம்பாதிமயேந்திரபாவததநலருததல. vide notes on the 42nd stanza.

(d) சுயம்பிரபை பிலத்துள்ளிருத்தல் 40 ,,

(e) இலங்கை உண்டானவிதம் 55 ,,

X. Causes for the certain occurrences. சிலசம்பவங்கட்கு ஏதுக்கள்:

1. கைகேயிக்கு இரண்டுவரம் தருகிறேன் எனத்தசரதர் சொல்லியதற்கு ஏது:—பாரதம் சபாபர்வத்தில் திரிதராஷ்டிரனிடத்தில் வரங்கேட்கும் திரௌபதி "வைஸ்யஜாதி ஸ்திரீக்கு ஒரு வரமும், க்ஷத்திரிய ஜாதிஸ்திரீக்கு இரண்டுவரமும், சூத்திரஜாதி ஸ்திரீக்கு மூன்று வரமும், பிராமணஜாதி ஸ்திரீக்கு அனேகவரமும் கொடுக்கலாம் என்று சாத்திரமிருக்கிறது" என்று சொல்லியதை யநுசரித்திருக்கிறது.

2. கைகேயி தனக்கு இரண்டுவரம் தரவேண்டுமென்றதற்கு ஏது: கேகயராஜன் தன்புத்திரியைத் தசரத சக்கரவர்த்திக்குத் தருகையில் தன்குமாரத்தியினிடம் பிறக்கும் பிள்ளைக்குப் பட்டங்கட்ட வேண்டுமெனக் கேட்டுக் கொண்டதற்குத் தசரதர் இணங்கியிருந்தது கைகேயிக்குத் தெரியுமாதலால் ஒருவரம் தன் மகனுக்குப் பட்டத்திற்கென்றும்,

மற்றொன்று ஸ்ரீராமனைக் காட்டுக்கு அனுப்புவதற்கென்றும் ஆதியிலேயே கைகேயி எண்ணியதாம்.

3. பிராட்டியைத் தேடிப்போயின அநுமான் அசோக வனத்தையழித்ததற்கு ஏது (vide notes on the 44 th stanza for cause.)

4. அநுமனால் யுத்தகளத்துக்குக் கொண்டுவரப்பட்ட சஞ்சீவி பெரும்பாலும் வானர வீரர்களுக்கு மாத்திரமே உபயோகப் பட்டதற்குக்காரணம் (vide notes on the 83rd stanza for cause.)

5. இந்திரஜித்து மாயா சீதையை அநுமன்முன் கொண்டுவந்தழித்ததற்குக் காரணம். (vide notes on the 84th stanza for cause.)

6. யாவராலும் விரும்பப்படும் ஸ்ரீராம பிரான் மேல் கைகேயிக்கு ஏவல் செய்பவளாகிய மந்தரை விரோதங்கொண்டதற்குக் காரணம்:— ஸ்ரீராம பிரான் சிறுவயதில் பந்தாடிக்கொண்டிருக்கையில் தரையில் மோதியபந்து அவ்வழியில் வந்த இம்மந்தரையின்மீது பட, அவள் தன்னையே யடித்ததாகச்சொல்ல, அவர் உண்மையைச்சொல்லிச் சமாதானஞ் செய்துங்கேளாதபடியால் கடிந்து கொண்டனர்-அவள் செய்யுந் தொழிலுக்கேற்ற அற்ப புத்தியுடையவளா யிருந்ததால் அதுமுதல் காரப்பிண்ணியம் வைத்திருந்தனள்.

XI. Certain inferences drawn by certain personages from certain occurrences. இன்ன செய்கையினால் இன்னார் இன்னவிதமாக அபிப்பிராயப்பட்ட தெனல்.

1. இலங்கையிற்சென்று மீண்ட அநுமான் ஸ்ரீராமபிரானுக்கு எதிர்முகமாய் வராமல்தென்திசையைநோக்கியஞ்சலிசெய்தபடியேவருகையில்அவர்கொண்டகருத்தாவது:— தென்திசையிற் சீதை உயிருடன் க்ஷேமமாயிருக்கின்றதை அநுமான் கண்டனன். ஆதலாற்றான் அச்சீதையை வணங்கியபடியே நம்மிடத்து வருகின்றனன் என்பதாம்.

2. பிராட்டியைத்தேடிச்சென்ற வானர வீரர் மதுவனத்தை யழித்தனரென்று சொல்லக்கேட்ட சுக்கிரீவன் ஊகித்ததாவது - பிராட்டியைத் தேடிச் சென்றவர்களாவது அப்பிராட்டியைக் கண்டிருக்கவேண்டும், அல்லது அவர்கள் தலைவர்களாவதுகண்டுவந்து இவர்களுக்கு அச்சந்தோஷச் செய்தியை யறிவித்திருக்கவேண்டும். அவ்வாறல்லாவிட்டால் வானரவீரர்கள் மதுவனத்தையழித்து அதனையுண்டுகளித்திரார் என்பதாம்.

3. கௌசிகமுநிவன் தசரதனை நோக்கி "நான் செய்யும்யாகத்தைக் காப்பதற்கு ஸ்ரீராமனை யனுப்பு" என்றதால் - திரிகாலக்ஞானியாகிய வசிஷ்டர் அறிந்ததாவது:— எந்த நோக்கத்தால் கடவுள் ஸ்ரீராமனாக அவதரித்தாரோ அந்நோக்கத்துக்கு உபகரணமாக (இவ்வுலகத்தியல்பின்படி) விசுவாமித்திரர், வில்வித்தைமுதலியனவும் தேவதாஸ்திரங்களை யடையும் வழிகளையும் உபதேசித்து, மிதிலையில்சீதாவிவாகத்தையும் நிறைவேற்றப் போகின்றனர் என்பனவும் அதன்மேல் விளைவுமாம்.

4. இராவண சம்மாரமாய் ஸ்ரீராமபிரான் முதலியஎல்லோரும் பரத்துவாஜ முநிவனது ஆச்சிரமத்தில் விருந்துண்டபின்பு, தமயனோடு காட்டுக்குவந்திருந்த பதினான்கு வருஷகாலமும் (ஆகார) நித்திரையை நீக்கியிருந்த இலக்ஷுமணற்கு, அன்று போஜனம் உண்டதால் "உண்ட யிளைப்புத்தொண்டருக்கு முண்டு" என்றபடி அவர்தடுக்கமுடியாதவிதமாக நித்திரை வர, இவ்வளவு காலமாய் நீங்கியிருந்த மூதேவி இன்று நெருங்கினளே யென்றெண்ணித் தனக்குத்தானே புன்னகை கொண்டிருந்ததைக் கண்ட இராமசந்திரன் (அவ்வவதாரத்துக்குத்தக்கபடி) ஊகித்ததாவது:— அந்நியனது நகரத்து இதுவரையிலும் இருந்த சீதையை நமது தமயன் அழைத்துவந்துவிட்டனனே யென்றெண்ணிப் பரிகாசமாக நமது தம்பி நகைக்கின்றனன் என்பதாம்.

XII. Double interpretations of expressions. சொற்றொடர்கள் அல்லது சொற்களுக்கு இருவிதமான பொருள்.

1. அங்கைநெடுங்குசன் - Vide notes on the 18th stanza.
2. ஆதிமாமுடி. ,, 24
3. சுந்தரனுமதத்துணைதுயர்க்கடலுளாழ்ந்தான்
இந்திரன் மகற்பரிய தெய்தினனிருந்தான் } 38.

4. தனைக்கு நாயகன் தம்பி. Vide notes on the 73rd stanza.
5. பின்றலில் பிலத்திடை. ,, 40th ,,

6. சாகரந்தனைக் காலினேகிவந்து=சமுத்திரத்தை, காலின் + ஏகி என்பதால் காற்றைப்போல மகாவேகமாய்த் தாண்டிச் சென்று என்றுவது, கால்=காற்று அல்லது அக்காற்று நிறைந்துள்ள ஆகாயமார்க்கமாய்த்தாண்டிச் சென்றனர் என்றுவது, கால் - அல்லது சிறுதண்ணீர்க் காலைத்தாண்டுவதுபோலத் தாண்டிச்சென்றனர் என்றுவது கொள்ளலாம். (48-வது செய்யுள்.)

7. இடந்தருமிராகவன. (75 - வதுசெய்யுள்) இடம் + தரும்என்பதற்குப்பேரின்பத்தைத் தரும் இடமாகிய மோக்ஷவுலகம் என்றும், இடம் பகைவராயினும் தன்னை யடுத்தவர்களைக் காத்தலே, தரு-செய்கின்ற இராகவன் என்றும்பொருள்கொள்ளலாம்.

8. அரணிய னெஞ்சினனவன்றன் றேவியாம். (53-வது செய்யுள்) இதில்அரண் + இயல் + நெஞ்சினன் - என்பதற்கு, காக்கும் + தன்மை (தங்கிய) + மனத்தையுடையவனென்றும், அரணியன்=காவலன் அல்லது (அவ்விரணியனுக்கு)துணைவனுயிருந்த இரணியாக்ஷனும், எஞ்சினன் - (அவ்விஷ்ணுவினாலேயே) மடிந்தான் என்றும். பொருள்கொள்ளலாம். (N. B. இதைப்போன்ற மற்றவற்றை ஆங்காங்கு கண்டுகொள்க.)

XIII. Peculiarities of expressions or words. அந்தந்த விடங்களில் உபயோகிக்கப்பட்டிருக்கும் சொற்றொடர்களாலும் சொற்களாலும் உள்ள விசேஷங்கள்.

| Exercise. | | Vide notes on the | |
|---|---|---|---|
| (1) வார்குழற்றுடைகை. | ,, | 5th stanza. | |
| (2) ஓமமாவலி. | ,, | 5 | ,, |
| (3) சினவீரர். | ,, | 6 | ,, |
| (4) மற்றுத்தநுவலி. | ,, | 9 | ,, |
| (5) மழுவேந்தன். | ,, | 12 | ,, |
| (6) குருகங்கை. | ,, | 17 | ,, |
| (7) வரத்தாலரசிந்தருள். | ,, | 15 | ,, |

(இதைப்போன்ற மற்றவற்றை ஆங்காங்கு கண்டுகொள்க.)

XIV. Ellipses. அந்தந்த விடங்களில் மறைந்து அல்லது தொக்கியிருக்கும் சொல் அல்லது சொற்கள இன்னவை யெனல்:—

(1) அன்றநுமனங்கதன் — (40 - வது செய்யுள்) இதில் அன்றுஎன்னும் பதத்தின்முன், ஸ்ரீராமபிரான் நியமித்த என்னும் இருசொற்கள் மறைந்திருக்கின்றன.

2. கண்டு சீதை கவர்ந்ததுதாவென—(30 - வது செய்யுள்)இதில், கண்டு என்பதன்முன், பன்னசாலைக்கு எதிரில் வந்த பொன்மானை என்னும் வார்த்தைகள் தொக்கி யிருக்கின்றன.

3. அப்புறத்தின் மருத்தனை—(69-வது செய்யுள்)இதில் அப்புறத்தில் என்பதற்கு முன் கும்பகர்ணன் வதைக்கு என்னு மிருசொற்கள் மறைந்திருக்கின்றன.

4. பற்றினர் சாரணுசுகரை— (58-வது செய்யுள்) இதில் சாரணசுகர் என்பதற்கு முன் வானரப்படையில்அவர்களைப்போல வுருக்கொண்டுவந்த என்பதுவரையில்

நோக்கியிருக்கின்றது. (இவ்வாறு வரும் மற்றவைகளையும் ஆங்காங்கு கண்டுகொள்க.)

XV. Geographical positions and importance of certain places. இன்ன நகரம் அல்லது மலை இன்ன இடத்தில் இருக்கிறது என்பதும் அதனதன் பெருமையும்.

1. பஞ்சவடி—அரங்கபாத்தில் (Aurungabad) கோதாவரி உற்பத்தியாய் வரும் வழியில் உள்ள விடம். இவ்விடத்தில் சூர்ப்பநகையின் நாசி முதலியன அறுபட்டதாகையின் இக்காரணத்தாலேயே இவ்விடத்திற்கு நாசிக் அல்லது நாசக் (Nasuk) என்று வழங்குகிறதெனத் தெரியவருகிறது. அன்றியும் இவ்விடம் (Khandesh) கான்டேஷுக்குத் தெற்கிலுள்ள யாத்திரைத்தலம்.

2. மயேந்திரம்—மலையாள சமுத்திரக்கரையோரத்திலுள்ள பர்வதம். சத்தகுலாசலங்களி லொன்று. இப்பர்வதத்திலிருந்துதான அநுமான் இலங்கையை நோக்கிப் பாய்ந்தனன்.

3. சித்திரகூடம்—சென்ட்ரல் இண்டியா ஏஜென்ஸி (Central India Agency) இல் பண்டில்கண்டு (Bundle-kund) என்னுமிடத்திலுள்ள ஓர்மலை - ஸ்ரீராமபிரான் தங்கிய இடம்.

4. சித்திரகூடம்—சிதம்பரம். சிறந்த சிவாலயமும் விஷ்ணுவாலயமும் உள்ள விடம்.

5. கோசலம்— நேபாளத்துக்கும் கங்கை நதிக்கும் இடையிலுள்ள தேசம். ஸ்ரீராமபிரான் பிறந்த நாடு.

6. தண்டகாரண்யம்—யமுனை கோதாவரியென்னு மிருநதிகளுக்கும் இடையிலுள்ள வனாந்தரம். பூர்வம் முனிவர்களும், இராக்ஷதர்களும் வாசஞ்செய்தவிடம்.

7. கிஷ்கிந்தை—பல்லாரி ஜில்லாவிலுள்ள (Humpey) ஹம்பியென்னு மலைக்கோட்டையுள்ள விடம். வாலியின் நகரம்.

8. பம்பாநதி—விந்திய பர்வதத்திற்குத் தெற்கில் டெக்கனில் (Deccan) உள்ள ஓர்நதி.

9. சேது—கீழ்சமுத்திரமும் தென்சமுத்திரமும் ஒன்றாய்ச் சேருமிடம். இலங்கைக்குப்போக அணை கட்டப்பட்ட விடம்.

10. பரத்துவாஜருடைய ஆச்சிரமம்—டில்லிராஜ்யத்தின் தென் கிழ்ச்திசையில் கங்கையமுனை சரஸ்வதி என்று மூன்றுநதிகள் சேருமிடத்திலுள்ள அலகாபாத்தில் (Allahabad) இருக்கும்ஓர் பெரிய தபோவனம்.

XVI. Grammar.

(a) Figurative words or tropes. ஆகுபெயர்.

பொருள் முதலாறோடு அளவை சொல்தானி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரால் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகுபெயரே.

This sutram is translated.

Figurative words are formed from words connected with the six common-places, viz, measurement or numbering, the container for the thing contained, cause for the effect, effect for cause, the work for the author, the author for the work etc., the name of one thing being put for another, on account of the supposed resemblance between the two things.

1. இடவாகுபெயர், காலம், குணம், தொழில், கருவி, கருத்தா belong to metonomy.

2. பொருள், சினை, எண்ணல், சொல், தானி—belong to Synecdoche.

N.B. As for examples of the above refer to my notes on the text.

(b) Changing one figure into another. ஒரு ஆகுபெயரை வேறொன்றாக வுபயோகிக்கும் வகையைக் காட்டல்.—

1. கார் - என்னுங் கருநிறத்தின்பெயர் மேகத்திற்கு ஆகும்போது ஆகுபெயர். அம்மேகம் வருஷிக்குங்காலத்தை யுணர்த்துகையில் இருமடியாகுபெயர். அக்காலத்தில் விளையும்பயிரை யுணர்த்துகையில் மும்மடியாகுபெயர். மற்றவையும் இவ்வாறே.

2. Vide grammatical notes on 'முடி' 'வளை' in the stanzas No. 24, and 42 respectively.

(c) Metaphor, comparison—உவமை or உருவகம். Ex. வெள்ளிலைவேல். Vide notes on the 12th stanza. உவமை is also an allegory, or parable.

(d) Solecisms, grammatical errors–வழு. Ex. அவர்கள் வந்தன.

(e) Allowed anomalies or deviations from grammatical rules. வழுவமைதி. Ex. "தந்தனை" vide notes on the 38th stanza.

(f) Personification–பாவனைரூபம் 'கடலுடை யிலங்கை' Sea-clad Lanka (vide notes on the 55th stanza.) "கல்லும் புல்லும் கண்டுருகப்பெண்கனி நின்றாள்" The maid stood looking so sweetly, that the very herbage and rocks would have melted, had they beheld her.

(g) Antonomasia or individual for the species. தொகைச்சிறப்பு. as. அவன் வித்தையிற் பிரகஸ்பதி This is same as saying, He is a Solomon. i. e. learned.

(h) Hyperbole. உயர்வு நவிற்சி Ex. Fleet as wind. 'வரைப்புயம்' (vide 81st stanza.)

(i) Irony. குறிப்பு i. e. contrary to what is actually meant. as "நன்று நீசெய்தி யென்றான் நடுங்கினை னொரீபுக் குய்ந்தான்!" Vide 98th stanza.

(j) Prescription - மரபு-என்பது, பெரியோர் எந்தப் பொருளை எந்தச்சொல்லால் எவ்வாறு சொல்லினரோ அப் பொருளை அச்சொல்லால் அவ்வாறு சொல்வதாம். 29 - வது செய்யுளில் பொன்னின நவ்வி - என்சையில் நவ்வி - என்பது ற்கு மான் கன்று எனப்பொருள். இதில் மானினது கன்று - என்பது மரபு. இதை விட்டு மான்குட்டி என்பது மரபு வழு. மற்றவையும் இவ்வாறே.

(k) Interchange of casal signs. உருபு மயக்கம்-என்பது ஒரு வேற்றுமையுருபு இருக்கவேண்டிய இடத்தில் வேறொன்று வழங்குவதாயினும் பொருள் செல்லும் வழியாய் உருபைத்திரித்துக்கொள்வதாம். உ - ம். பழியை யஞ்சினன்.

(l) Euphony. இசைநிறை - vide notes on the 34th and 50th stanzas.

XVII. Rhetorical embellishment. அலங்காரம்.

(a) 81-வது செய்யுளிலுள்ள வரைப்புய மகோதரன்-என்பதிலும், 62-வது செய்யுளில் பாதபங்கயம் என்பதிலும் முறையே போன்ற, ஆகிய, என்னும் பண்புறுப்புகள் தொக்கியிருப்பதால் தொகையுருவகமெனப்படும். உருவகமாவது-உபமான உபமேயங்களை ஒற்றுமை படுத்திக் காட்டுவதாம். அன்றியும் மேற்சொல்லியது உயர்வு நவிற்சியணி எனவும் படும். இதைப்பின்வருவதிலுங்காண்க.

(b) 10 - வது செய்யுளிலுள்ள "இந்திரவில் எனயாரு மெடுத்தே" என்பதில்ஜனகராஜனிடத்திருந்த தனுசை, இந்திரதனுசுபோன்ற தனுசு எனச்சொல்வதொழிந்து, 'இதுவே இந்திரதனுசு' என்று கண்டோர் அதிசயித்துச் சொல்லு

ம்படியானவில் என உபமேயத்தை யதன்சொல்லாற்சொல் லாமல் உயர்வினால் உபமானச் சொல்லால் இலக்கணையாற் சொல்வதற்கு, உயர்வு நவிற்சி யலங்காரம்அல்லது உருவக வுயர்வு நவிற்சி யலங்காரம் எனப்பெயர்.

(c) 60-வது செய்யுளில் இலங்கைவேந்தனும் என்பதில் உள்ளதற்கு நிரல் நிறை என்று மலங்காரம் எனவும், நிரனிறைப்பொருள்கோள் எனவும்பெயர். பொருள்கோள் எட்டு வகைப்படும். நன்னூல். பொதுவியல் சூ-60-முதல் 68-வரையில் இதைக்காண்க. Vide notes on the 60th stanza.

XVIII. Prosody - யாப்பியல் - கம்பராமாயணக்கருப்பொருளிலுள்ள விருத்தச்செய்யுட்களி னியல். பொதுவாசுபாவினங்கட்கு உறுப்புகள்,

(a) எழுத்து, (b) அசை, (c) சீர், (d) தளை. (e) அடி, (f) தொடை, என்னும் ஆறும்.

(a) A letter - எழுத்து - என்பது எழுத்திலக்கணத்திற்சொல்லிய முதல், சார்பு என்னு மிருவகை எழுத்துக்குருமாம். செய்யுளடிக்கு எழுத்து எண்ணுகையில் மெய்கள் எண்ணப்படா.

(b) Metrical syllable. அசை - என்பது எழுத்துக்களாலாக்கப்பட்டுச் சீர்க்கு உறுப்பாய் வருவதாம்.

அவ்வசை (1) நேரசை (2) நிரையசை யென இருவகைப்படும்.

(1) நேரசையாவது, ஒரு குற்றெழுத்தாயினும் ஒரு நெட்டெழுத்தாயினும் தனித்தாவது ஒற்றடுத்தாவதுவருவதாம். உ-ம். அ, ஆ, அல், ஆல்.

(2) நிரையசையாவது - இருகுறிலாவது, குறிலும்நெடிலுமாவது முன்போல் தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும்வருவதாம். உ-ம். கர, கரா, கரம், கராம்.

வித்தாய்விளைவாய்வைத்தாய்தாலோதாலேலோ
வெற்பாய்வெளியாய்நிற்பாய்தாலோதாலேலோ
முத்தேவரையேபெற்றாய்தாலோதாலேலோ
முத்தேமணியேயுற்றாய்தாலோதாலேலோ
நத்தார்புலியூருற்றாய்தாலோதாலேலோ
நற்றாய்சிவகாமித்தாய்தாலோதாலேலோ. (சு)

நச்சாருளமேகைச்சாய்தாலோதாலேலோ
நச்சாரவக்கச்சாய்தாலோதாலேலோ
வச்சேமுலையாய்விச்சேதாலோதாலேலோ
மற்றாருளைப்பெற்றாய்தாலோதாலேலோ
இச்சாகிரியாசத்தீதாலோதாலேலோ
வெப்போதெனைவாழ்விப்பாய்தாலோதாலேலோ
விச்சாதராராசிப்பாய்தாலோதாலேலோ
மெய்த்தாய்சிவகாமித்தாய்தாலோதாலேலோ. (எ)

பொற்பூமணமேபொற்பூநிறமேபூமாதே
பொற்கேகயமேசொற்காவியமேபூவாயே
தற்பூரணமேதற்காரணமேதரவந்தே
தற்போதமெலாம்விட்டேயகலவார்தமவாழ்வே
கர்ப்பூரவிபூதித்தூளிதநீள்காமாரி
கட்காமினிமோகக்காதலிநீகாபாலி
விற்போனுதலாய்வெற்போன்மதலாய்தாலேலோ
மெய்த்தாய்சிவகாமித்தாய்தாலோதாலேலோ (அ)

முற்றாமுலையாய்முத்தாவலியாய்தாலேலோ
முத்தார்நதியாய்நற்காவிதியாய்தாலேலோ
பொற்றாமரையேநற்கோமளமேதாலேலோ
பொற்பார்புலியூரிற்பூருவமேதாலேலோ

கற்றருளம்வாழ்சொற்கோகிலமேதாலேலோ
    கைக்கேசிவமாலைக்கேய்கிழயாய்தாலேலோ
வெற்றாய்வெளியாயுற்றாயொளியாய்தாலேலோ
    மெத்தாய்சிவகாமித்தாய்தாலோதாலேலோ. (௯)

ஏக்காலமுமேசிற்பாய்நீயேவீயாதே
    யெத்தேவருமேசெத்தேபோவார்சாகாதே
யக்கார்விடமேதுய்த்தார்பாடீயாளுதே
    யப்போதமிர்தாவைத்தாய்வேயார்தோளாயே
தக்கோர்தமைவாழ்விப்பாய்தாயேமாதாவே
    தப்பாகிதியேபொற்பாய்போதாய்கோமாதே
மிக்காருணையாரொப்பாய்விமலாய்தாலேலோ
    மெய்த்தாய்சிவகாமித்தாய்தாலோதாலேலோ. (௰)

தாற்பருவம்-முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# சப்பாணிப்பருவம்.

வேறு.

கட்டுறுசுருங்கிடைத்துடிகொட்டவட்டம்வரு கடவு ள்கொடுகொட்டிநடனங், கண்டுதாளங்கொட்ட வுன துசெங்கையினுற் கற்றிடக்கொட்டுவதுபோற், கொட் டமிடுமவுணர்வாய் குருதிகொட்டப்புடை குடைந்துகு டர்மாலையிட்டுக், கொட்டிடமிட்டிடுங்கொட்டாதநெ ட்டிலைக் குடுமிவேற்குழவிமுத்தம், இட்டுமுத்தாடவா

வென்றுகைக்கொட்டல்போ லினியமுத்தமிழியற்றி,யி ருகைமலர்கொட்டல்போ * லெட்டுமிருபத்துஞ விட் டவேகத்தவற்குஞ், சட்டுவத்திட்டமுது கொட்டுமுன் கையினுற் சப்பாணிகொட்டியருளே, தற்பராசத்தியே சிவகாமவல்லியே சப்பாணிகொட்டியருளே. (௧)

முட்டாமறைப்பொருட்டாரசனுங்குரைகடல முகட் டரவணைச்செல்வனு, முக்கட்டிருக்கடவு ளுங்கண்டு முடிபணிய முறைமுறையழித்துலகெலாம், கட்டாக நீபடைத் திடுகநீகாத்திடக் களைகநீயென்றுவெள்ளைக்; கலையுடன்பொன்னிறக் கலையுடன்பச்சைவெண் கலையு மேயருளுகையினல், எட்டாதபேரின்ப மெட்டவருமந் திர மிசைந்திடும்பசுங்கிள்ளையு, மெட்டுணையுமறவா திர ட்டுசெபமாலையுமெண்ணிறலெட்டறமுமே, தட்டாது வைத்தளித்திடுமுனதுகையினுற்சப்பாணி கொட்டியரு ளே, தற்பராசத்தியேசிவகாமவல்லியேசப்பாணிகொட் டியருளே. (௨)

கற்பகத்தருவுமே கவடுளதுபதுமநிதி கள்ளமுற்றது தேனுவுங், கட்டுமுட்டுண்டது கொடுத்திடுங்கொடை யினுற் கடைபடுஞ்சிந்தாமணி, பொற்புலவுசங்கநிதியங் கமுறுசலமுறும் பொழியுமழைமுகில்குழறிடும், புவி மீதுஈவதியாகவேபுகலாதெவர்க்குமுதவா, வ ற்புதமுத்தியமு மட்டமாசித்திகளு மகில்வலயம்புரக் குமந்திறமுமுத்தி,மந்திறமுமுத்தியுமளிக்குமோவென் றுநின் னங்கைமலர்கொட்டுவதுபோ, றற்பரகலாசத்

* எட்டும் இருபத்திஞலிட்ட ஏகத்தவர் - என்பது முப்பத்து முக்கோடிதேவர்களெனக்கொள்க.

திசகலாகமத்தியே சப்பாணிகொட்டியருளே,தற்பராச த்தியேசிவகாமவல்லியே சப்பாணிகொட்டியருளே. ()

அடிதொடங்கிப்புடையு முடியுள்ளுமுடிகாறு மடை யும்வெம்பொறிவிடையமு, மாசையொடுவெகுளியு ம யக்கமொடுமுக்குணமு மலகிலிடைபிங்கலையுமோ, ரி டைகிடந்தலமந்து திரினனவுகனவுமற் றிறைவிநின்னடி பற்றியே, யிலகுமெய்ச்சிவயோக விதையமலர்கொட் டியே யிருகைமலருங்கொட்டியே, படியடங்கலுநின்று பார்த்திடந்தோறுநின்படிவமேகண்டுபணியும், பரமஞா னியர்கண் களித்தங்கைகொட்டவே படருமுக்காலமு ணரும், சடிலமுனிவர்கள்கண்டு தமதங்கைகொட்ட வே சப்பாணிகொட்டியருளே, தற்பராசத்தியே சிவகா மவல்லியே சப்பாணிகொட்டியருளே. (௪)

ஐவரைப்பெற்றே வளர்த்திடுகையினு லேந்தொழிலு மருள்கையினு,லைம்பெரும்பூதமு மமைத்திடுங்கையினு லலகிலாவுயிரனைத்தும், பைவருகுரம்பையி லடைத்து விளையாடுகிறு பம்பரச்செங்கையினுற், பாசயமராசன் வருபோதஞ்சலென்றெமைப் பாதுகாத்தருள்கையினு ல், மொய்வளைக்கரையன்மக ளாகிமுக்கண்ணனுர் மு ழுமணக்கோலமதனில், முளரிமலர்விரல்கொடுத்தருள் கையினுலிள முலைத்தழும்போடுவளையத், தைவருதழு ம்புவைத் தருள்கையினுலினிய சப்பாணிகொட்டியரு ளே, தற்பராசத்தியேசிவகாமவல்லியேசப்பாணிகொட் டியருளே. (௫)

வேறு.

வெட்சிமலர்ப்பதமொப்புநடப்பதுகற்பவனப்பேடை, மெச்சகடித்துவியப்பொடுகற்பனபச்சைமயிற்சாயல், க

ட்சிவனக்குயில் பச்சைமடக்கிளி கற்பனசொற்பூவை, கட்கமலர்ச்செயலொப்பவரிப்பெடை கற்பவுனைப்போல, எட்செயலத்தனைகற்றிலமெப்படி நிற்பமெனக்கூடி, யெட்கினவெட்கி யிருப்பதிலச்சை யற்பமெனப்பேசிக், கொட்சிறைகொட்டுவ கட்டழகுற்றவள் கொட்டுகசப்பாணி, குற்றமகற்றிய பொற்புலிசைக்கொடி கொட்டுகசப்பாணி. (சு)

முத்துநிரைத்தபல்முக்கனியொத்தசொல் முச்சிமலர்க்கோதை, முத்தமிழ்சொற்கமழ்குற்றமர்புத்தகமூத்தியருட்பாதம், வித்துருமத்தினி லொத்தசிவப்பெழுமெச்சிடைகச்சோதம், வெற்றியநுதற்சிலை மைக்கண்மலர்க்கணை வெற்புமுலைப்பூவை, உத்தமிபத்தினிகற்புமிகத்தணி யுற்றொளிர்பொற்றொளி, யுற்பலகைத்தலிபச்சைநிறப்பிடி யொப்பிடுமத்தாளி, கொத்துருதத்துவமத்திலிருப்பவள் கொட்டுகசப்பாணி, குற்றமகற்றிய பொற்புலிசைக்கொடி கொட்டுகசப்பாணி. (எ)

பச்சைநிறத்திமிகுத்தசிவப்பிபளிக்கின்வெளுப்பாண், பற்பலசத்திநிபத்திவிளக்கிடு பத்தருளக்கோயில், இச்சையிலுற்றனைதுச்சிலெனத்தனி விட்டிலைபொற்பாத, மெற்குளம்வைத்தனைகற்குளமுற்ற வெழிற்கமலப்போதன், அச்சுதனச்சுதனச்சுழிவுற்றுழி யுற்றரதிக்காக, வற்பினெழுப்பி யலர்க்கணையிக்கு மளித்தமலர்ப்பாணி, குச்சரிகைச்சரிமிக்கமுழக்கொடு கொட்டுகசப்பாணி, குற்றமகற்றிய பொற்புலிசைக்கொடி கொட்டுகசப்பாணி. (அ)

நித்திலமுற்றுருவிற்றெரியப்பெரு நெட்டுருவிற்சூழ, நெட்டரவத்தெழு செக்கர்மணிச்சுட ருச்சிமுடிப்பூண, கைத்தலசக்கர நற்பருதிச்சுடர் பக்கமுறச்சீத, கட்க மலச்சுனை மிக்கவிழிக்கணை கட்டழகிற்காண, வைத்த நறப்பெரு வட்டமணிச்செவி யிட்டகுழைக்கோல, மற் புறுபச்சை நிறக்கழைபொற்புய மச்சுதனைப்பான, கொத்துறுவெற்பர சற்கொருபுத்திரி கொட்டுகசப்பாணி, குற்றமகற்றிய பொற்புலிசைக்கொடி கொட்டுகசப்பாணி. (௯)

கற்றவருக்கருள்கற்பகமைப்புய லொத்தகழைத்தோளி, கர்ப்புரநற்புழு கப்பியபொற்கள பத்தொடுகஸ்தூரி, யுற்றிடுமத்தக மொத்ததனத்திரு வுத்தமியிப்பூவி, லொப்பனைவைத்திடு வெப்புவனத்திலு மொப்பிலிபற்றுறை, வெற்றிகொள்முக்கணி பொக்கணியக்கணி வித்தகிவித்தார, வித்துருமப்பணி சித்திரநற்பணி மெய்க்கணிபொற்பூணி, கொற்றவைமற்றுள சத்திகணத்தினள் கொட்டுகசப்பாணி, குற்றமகற்றிய பொற்புலிசைக்கொடி கொட்டுகசப்பாணி. (௰)

சப்பாணிப்பருவம்-முற்றிற்று.

சிவமயம்.

# முத்தப்பருவம்.



வே று.

சுருதிமணக்குஞ்சிவாகமத்தின் றோற்றமணக்கும்வடகலைநூற், றுலங்கிமணக்குந்திராவடத்தின் சுவையேமணக்கும்பிராகிருத, மருவிமணக்குமூலகளிக்கு மகிமைதருமந்திரமணக்கு, மலையமிருக்குமியலிசையும் வளர்மந்திரத்திஞதாரம், பெருகிமணக்குஞ்சமயநெறி பிறழாச்சகலசாஸ்திரமும், பேதாபேதவகைமணக்கும் பேரம்பலநாட்டகத்தார்கள், தருமமணக்குங்கனிவாயிற் றகைசேர்முத்தந்தருவாயே, தழைக்கும்புலியூர்ச்சிவகாமித் தாயேமுத்தந்தருவாயே. (க)

செயிருற்றிடுதீவினைபோக்குந் தீராப்பிறவித்துபர்தீர்க்குஞ், செனிக்கும்பிறவிதோறுஞ்சேர்ந்த செறிசஞ்சிதமுநீறுக்கும், பயிலுற்றிடுமோகாமியமும் பழுதாம்பூதபவுடிகமும், பற்றுபற்றற்றிடுமோயைப் பாசிப்பாசவாசனையும், உயிரிற்கலந்தமும்மலமு முற்றுங்களிம்புமொருங்கற்று, முமியுந்தவிடுமுளையும்போ லுறுதத்துவத்தின்வேராறுக்குந், தயிரிற்பிறைபோற்சிவமாக்குந்தகைசேர்முத்தந்தருவாயே, தழைக்கும்புலியூர்ச்சிவகாமித்தாயேமுத்தந்தருவாயே. (உ)

முத்தநகையால்முத்தநின்பால் முகமாமதியாமுத்தின்பால், முகிற்கூந்தலிஞல்முத்தநின்பால் முலையானை

யினால்முத்தகின்பால், நத்தார்களத்தால்முத்தகின்பால் நயனக்கயலால்முத்தகின்பால், நடுக்கட்செவியால்முத் தகின்பால் நறுநெற்படியால்முத்தகின்பால், கைத்தாம ரையால்முத்தகின்பால் கன்னற்சிலையால்முத்தகின்பா ல், கழைத்தோளதனைலமுத்தகின்பால் கனிவாய்முத்த முனக்கரிதோ, சத்தாய்ச்சித்தாய்ச்சகசித்தாம் தாயே முத்தந்தருவாயே, தழைக்கும்புலியூர்ச்சிவகாமித் தா யேமுத்தந்தருவாயே. (௩)

மச்சத்துழியிற்பிறந்துமுத்தும் வராகத்திடையிற்பிற ந்தமுத்தும், மார்பத்தணியும்வேயீன்றமணிவாய்முத்த ஞ்சுவைத்தருளும, பச்சைக்கிளியேமாணிக்கப் பவளக் கோவைக்கனிவீழிப், பழமாதளமிந்திரகோபப்பங்கேரு கப்பூமுருக்கிலவம், உச்சித்திலதமரக்காம்ப லூறும்பசு ந்தேன்கசிந்தூறு, முள்ளும்புறம்புமணநாறு முனதுகனி வாய்மணிமுத்தம், சச்சைச்செழுங்குங்குமத்தனத்தா ய் தகைசேர்முத்தந்தருவாயே, தழைக்கும்புலியூர்ச்சி வகாமித் தாயேமுத்தந்தருவாயே. (௪)

கண்ணாலுனதுமலர்ப்பாதங் கண்டேகளிக்கவிருகர மும், கமழ்பூமலராற்பூசிக்கக் காலுங்கோயிலவலஞ்செ ய்ய, எண்ணார்செவிகணின்கீர்த்தி யிசையேகேழ்க்கத் தலைவணங்க, யேழேழ்சென்மமெடுத்தாலு மென்னாகி ன்னைத்தொழுதேத்தப், பெண்ணாமுதேமலையரையன் பெற்றமதலாயுலகமெலாம், பிறக்கவேண்டிப்பிறந்தபி ள்ளாய் பேரானந்தவெள்ளத்தில், தண்ணாரமுதேசுவை யூறுந் தகைசேர்முத்தந்தருவாயே, தழைக்கும்புலியூர் ச்சிவகாமித் தாயேமுத்தந்தருவாயே. (௫)

வேறு.

அகிலமுற்றும்பலவுயிர்க்குந்திடமளிக்குஞ்சலமெனு, வருடமைக்கும்படியளிக்குந் தொழிலுடைப்பங்கயனு ம்வாழ், சிகரிவெற்பு நதிகிரிவெற்புஞ் செகமனைத்துஞ்சு ழலவே, திரைகடற்செம்புனல்கலக்குஞ் சுதையளிக்கு ம்புயனும்வான், ககனமுற்றுங்குடியிருக்குங் கடவுளோர் க்கொன்றிடுவதோர், கடுவினைத்தின்றுயிரளிக்குங் கரு ணைவைக்கும்பரனுமே, தகவுனைக்கண்டவர்துதிக்குந் த ருகமுத்தந்தருகவே, சபையினிற்சுந்தரியெமக்குந் தரு கமுத்தந்தருகவே. (௬)

கனல்விளக்குங்கிளையின்முத்தங் கதமெழரிக்கண்பொ ரியுமே, கடுநடைச்செம்புகாமுகத்தின் கரியின்முத்தங் கரியுமே, புனல்விளைக்கும்புயலின்முத்தங் கதறிடக்க ண்சிதறுமே,புதுமதிக்கண்டிகழுமுத்தங் குறுமுயற்கொ ண்டொளிருமே, தினவிளைக்குங்கழையின்முத்தந் திகி ரியிற்கண்குழையுமே, செறியிதழ்ச்செங்கமலமுத்தங் களறுனிற்சென்றுலருமே, தனதுமுத்தங்குனதுமுத்தந் தருகமுத்தந்தருகவே, சபையினிற்சுந்தரியெமக்குந் த ருகமுத்தந்தருகவே. (௭)

சிமிழினிற்றண்டரளமுத்தஞ்செகமனைத்தும்பெறினு மே, சிறிதுமற்றங்கதுபெறச் சிந்தையில்நினைக்குங் குறி யிலேங், குமிழினிற்றண்டரளமுத்தங் குளிர்மதிப்பிஞ் செனினுமே, கொளநினைகரும்பரிசிலேக்குங் குமமணக் குங்கமுகின்வாழ், கமழ்களத்தின்றாளமுத்தங்கிலகெ ற்பங்கெடினுமே, யழிவில்பொற்பங்கதுவெமக்கும் பெ றுதல்சற்றுங்கருதிலேம், தமிழ்மணக்குங்குமுதமுத்தந்

தருகமுத்தந்தருகவே, சபையினிற்சுந்தரியெமக்குந் த
ருகமுத்தந்தருகவே. (அ)

குமரிவெற்பன் குமரிதக்கன் குமரிமுற்றுங்குமரியே,
குமரர்முக்கண்குமரர்மக்கள் குமரர்பெற்றுங்குமரியே,
அமரருக்கன் றசுரரைக்கொன் றமர்தவிர்த்தங்கமரியே,
அமரிகற்சங்கரிமூலக்குஞ்சரிகிலேப்பெண்சிகரியே, திமி
ரமுட்குந்தினகரற்குங் கிரண்முயக்குங்கருணியே, திரு
மகட்குங்கலைமகட்குந்திரமளிக்குந்தமரியே, தமரின்மு
த்தந்தமரின்முத்தந்தருகமுத்தந்தருகவே, சபையினிற்
சுந்தரியெமக்குந்தருகமுத்தந்தருகவே. (கூ)

வலையினிற்செங்கயலையுய்க்கும்பிணையையச்சம்புரியு
மா, வடுவையுப்பின்படவிக்குங் கடுவினைப்பின்றுடரு
மே, அலையினைச்சென்றலையவைக்குஞ் சுதையினைத்தி
ன்றுமிழுமே, யலரினைச்சென்றலர்படுக்கும் பகழியைக்
கண்டிகழுமே, கொலைபடைக்குஞ்சமனிறக்கும் படிவி
ழிக்குங்குமிழைபே, குறுகிநிற்குங்குழையடர்க்குங்கம
லமைக்கண்கமலையே, தலையளிச்செங்கருணைவைக்குந்
தருகமுத்தந்தருகவே, சபையினிற்சுந்தரியெமக்குந்தரு
கமுத்தந்தருகவே. (0)

முத்தப்பருவம்-முற்றிற்று.

---

சிவமயம்.

# வருகைப்பருவம்.



நந்தாவனங்கள்பூவிசிற நனைதென்விசிறித்தான்விசிற, கரும்பொற்பாளையிணைக்கவரி நாளிகேரங்கமுகிரட்ட, மந்தாநிலம்பன்னீர்தெளிப்ப மலர்த்தாமரைகள் விளக் கெடுப்ப, மணியாழ்ஞிமிறுவாசிப்ப மயில்களாடக்குயி ல்பாட, கொந்தாரகதலியாலவட்டங் கூந்தற்கமுகுகு டைபிடிப்பக், குவளைவிழிப்பச்செஞ்சாலிக் குலவேந்த ரசுகொலுவிருக்குஞ், சிந்தாமணிப்பொற்புலியூர்வாழ்த் திருவேவருகவருகவே, தேயாமதியேசிவகாமித் தாயே வருகவருகவே. (க)

மகமேருவைநேர் கோபுரமோ வானூடளவு மாமதி ளோ, வளர்பாம்புரியோவாயிரக்கால் மணிமண்டபமோ காவணமோ,அகமேமகிழ்கல் லூரியமோ வணிமாளிகை யேசூளிகையோ, வலர்பூங்கொடிஞ்சிநெடுந்தேரோ வ ணிவீதிகளோபலகோடி, உகமேவிளங்குஞ்சினகரமோ லொளிர்கற்றளியோ தெற்றிகளோ, வுயர்சாளரமோ வோவியமோ வொன்றுலொன்றுங்குறைவில்லாச், செ கமேபுகழும்புலியூர்வாழ்த் திருவேவருகவருகவே, தே யாமதியேசிவகாமித் தாயேவருகவருகவே. (உ)

வாழ்வேவருகவெமதுகண்ணின் மணியேவருகமதியூ டு,வந்தேவிளங்குமொளிவருக வளருமொளிக்குள்ளொ ளிவருகத், தாழ்வேயகலுஞ்சிவம்வருகத் தழைக்குஞ் சிவத்தின்செயல்வருகச், சகலவுயிர்க்குமுயிர்வருகச் ச

கமுமுயிருந்தான்பூத்தப், பூவேவருகப்பூவுலகம் பூத்தேகாய்த்துப்பழுத்தவித்தின், பொருளேவருகப்பொருளாகிப் போகம்விளைக்குமானந்தத், தெருளேவருகப்புலியூர்வாழ்த் திருவேவருகவருகவே, தேயாமதியேசிவகாமித் தாயேவருகவருகவே. (௩)

கருந்தாரளகக்கடசியர்தங் கண்ணேகண்ணீரிடைச்சுழலக், கயலாமெனவேகிழநாரைக் கார்வாய்க்கவரக்காத்திருக்கும், பருந்தாழ்ந்திறைஞ்சப்பறந்துசுற்றும் பள்ளப்பயல்கள்பறிதூக்கும்,பழநக்கரும்பின்முத்துநிலாப் பரந்தேமலர்த்தாமரைமுகிழ்க்கும், பெருந்தாட்குவளைமுகையவிழ்க்கும் பிள்ளையெனச்சூல்சங்கணைக்கும், பெடைமென்குமரிமடவன்னம் பெருமுட்டைகளென்றடைகிடக்குஞ், செருந்தாழ்ச்சோலைப்புலியூர்வாழ்த் திருவேவருகவருகவே, தேயாமதியேசிவகாமித் தாயேவருகவருகவே. (௪)

கொழிக்குங்கருணைமழைமுகிலே குழையாநறுங்குங்குமக்குழம்பே, கொழுங்கற்பகமேகோமளமே கோமேதகமேமரகதமே, இழைக்குமணிப்பூணணிக்கலமேயிழையாமணிச்சிந்தாமணியே, யெழுந்தேயொளிர்பொன்மலைக்கொழுந்தே யெழுபுன்பிறவிக்கொருமருந்தே, தழைக்கும்பெருவாழ்வருட்சிவமே தவமேஞானத்தனிவிளக்கே, தமிழ்க்கேயுதவுஞ்சதகோடிச் சங்கநிதியேசரோருகமே, செழிக்கும்புலியூர்வாழ்வருகத் திருவேவருகவருகவே, தேயாமதியேசிவகாமித் தாயேவருகவருகவே. (௫)

வேறு.

திரிபுரசுந்தரிவருகவேவெகு தேவதுரந்தரிவருகவே
தினகரகுண்டலிவருகவேமுக சீதளமண்டலிவருகவே
மரகதவண்கொடிவருகவே மயிடாசுரசங்கரிவருகவே
மலையரயன்கொடிவருகவே நலவசிகரமங்கலைவருகவே
பரிபுரமுண்டகிவருகவே பரவாதவர்கண்டகிவருகவே
பரசிவசங்கரிவருகவே பரிவாகியநெஞ்சகிவருகவே
கரதலகந்தரிவருகவே கலிகோபுரந்தரிவருகவே
கனகசிதம்பரிவருகவே சிவகாமசவுந்தரிவருகவே. (௬)

அர்கராசங்கரிவருகவே பசுரோசர்பயங்கரிவருகவே
பமலிசுமங்கலிவருகவே பதிரூபவலங்கரிவருகவே
சிரகரசுந்தரிவருகவே சிரமாலிதுரந்தரிவருகவே [வே
சிவசிவவம்பிகைவருகவே சிவலோகதிரியம்பிகைவருக
பரமசிரந்தரிவருகவே பரிபூரணபஞ்சமிவருகவே
பவளவினங்கொடிவருகவே பறவாதபசுங்கிளிவருகவே
கருணைதருந்திருவருகவே கயிலாயபராபரிவருகவே
கனகசிதம்பரிவருகவே சிவகாமசவுந்தரிவருகவே. (௭)

குமரிகுழுக்கொடிவருகவே குரவேகமழ்கொந்தளிவருகவே, குடிகாகொங்கைகள்வருகவே குடகாவிரிகொங்கைகள்வருகவே, அமரிபசும்பிவருகவே யடையார்படைவென்றவள்வருகவே, யடியவர்குடிபிடவருகவே யடியேன்மிடியுங்கெடவருகவே, தமருகவிஞ்ஞையள்வருகவே சதுர்வேதவிபஞ்சகிவருகவே, தயைகுணபஞ்சரிவருகவே சகலாகமபஞ்சரிவருகவே, கமலமுகந்தவள்வருகவே கருணாகரவம்பிகைவருகவே, கனகசிதம்பரிவருகவே சிவகாமசவுந்தரிவருகவே. (அ)

அவமதிசிந்திட வருகவே யழியாநிதிதந்திட வருகவே, யகிலபவங்கெட வருகவே யகிலாவிபராந்தரவருகவே, சிவகதிதந்திட வருகவே சிவபோகம்விளைந்திட வருகவே, திருவடிதந்திட வருகவே செகமாயைதெளிந்திட வருகவே, குவலமுய்ந்திட வருகவே வளர்கோயில்விளங்கிட வருகவே, குறைகடவிர்ந்திட வருகவே கொடியேனும் வணங்கிட வருகவே, கவலைதவிர்ந்திட வருகவே கலிகாலபயங்கெட வருகவே, கநகசிதம்பரிவருகவே சிவகாமசவுந்தரிவருகவே. (கூ)

மறமலிகஞ்சுகிவருகவே மறவாதவர்நெஞ்சகிவருகவே, மதிபதிகஞ்சுளிவருகவே மதுவாணினையுந்துளிவருகவே, பறுவதனந்தனிவருகவே முதுபாரதியிந்திரைவருகவே, பரகதிதந்திட வருகவே பசுபாசமகன்றிட வருகவே, பொறையின்மிகுந்தவள்வருகவே புலியூரினில்வந்தவர்வருகவே,புரமெரிதந்தவள்வருகவேபுவனுதிகடந்தவள்வருகவே, கறையணிகங்கணிவருகவேகணையோவெனும்வெங்கணிவருகவே, கநகசிதம்பரிவருகவே சிவகாமசவுந்தரிவருகவே. (ய)

வருகைப்பருவம்-முற்றிற்று.

சிவமயம்.

# அம்புலிப்பருவம்.

---

சிவனிடப்பாகத் திருந்துவிளையாடுமிவள் சிவன்முடி யில்விளையாடுநீ, சிவனிடக்கண்ணுமிவள் கண்ணுகிநீயு மோ சிவனிடக்கண்ணதாகுங், கவனமுறுகலையுளதுன க்கிவடனக்குமோ கவனமுறுகலைவாகனங், ககனவிபுத ர்க்கமுத முதவுநீயிவளுமோ கருணைவிழியமுதமுதவு ம், பவனமுறுபாற்கட லுதிக்குநீயிவளும் பராபரக்கட லுதயமாம், பைங்குவளைநண்பனீ யிவளுமோசெங்கை ப் பசுங்குவளைநண்பினேந்தும், அவனிமிசையிருவர்ஊ ஞு நிகராகுமுகமன்ன ரம்புலியாடவாவே, யம்பலருட ன்மருவு சிவகாமவல்லியுட னம்புலியாடவாவே. (க)

வடிவெலாநின்கட் களங்கமுளதிவடன் மனத்திற்கள ங்கமுளதோ, மதிமுகப்பிள்ளைதனை மதியாதிருப்பதுன் மதிகுறைந்தடுதலாலோ, முடியின்மிசைநீயிருந் தாலு மிவளடியிணையை முடியொடும்பணியவிலையோ, முய லுளதுமுதுபுலியை நெக்குவிடநெக்குமோ முதுபுலி யைமுயல்வெல்லுமோ, படியின்மிசைகடிதுவர வாரா திருந்திடிற் பாராதிருந்துவிடுமோ, பதஞ்சலியெனும்பெ ரிய பாம்பினையெடுத்தூம் பாவைதிருமுன்வைத்திடும், அடியிணைலமிர்தம் பிறித்தலுமறிந்துநீ யம்புலியாடவா வே, யம்பலவருடன்மருவு சிவகாமவல்லியுட னம்புலி யாடவாவே. (உ)

விற்பகருமுத்தம் பிறக்குமின்கிரணத்தின் வேயன்ற முத்தமணியே, வேய்ப்புடைபசுந்தோளி மிடறெனும்பூ தத்தின் வெண்முத்தமும்பிறக்கும், பொற்புறுவிமானத் தி னுலகவிருளகலவே பொன்வரையைவலம்வருவை நீ, பொற்புறுவிமானத்தர் புந்தியிருளகலவிப் பொன்மலை யைவலம்வருகுவாய், கற்புடையகன்னியரு னைப்பணி யலாகாது கன்னியிவளைப்பணியவே, கற்பதுமிருத்திடு மெப்போதுமுப்போது காணப்படாதுன்னையே, அற்பு தமிதற்குமே லெவையுளதுவினையகல வம்புலியாடவா வே, யம்பலவருடன்மருவு சிவகாமவல்லியுட னம்புலி யாடவாவே. (ரு)

பாகாயமொழிவஞ்சி முகமாயிரங்கலைகள் பளபளத்தி டுமதியமே, பச்சைப்பசுங்கதி ரிறைவுண்டுபறவாது பதி தனில்சகோரம்விழியே, போகாதகுறுமுயற் கறையுமி ருபுருவமும் பொட்டிடுதுதற்குறியுமே, புரியளகபந்தியு ஞ் சிகழிகைபழியாது புடையிலிடுபிறைவடமே, வாகாய மாணிக்க மணிமன்றுள்நடனமிடு வள்ளலுண்ணக்கு றைபடா, வளர்கலைப்பெண்பிள்ளை நின்னொடொப்பெ ன்னவே மன்னுசெஞ்சடைமுடியின்மேல், ஆகாயகங் கையுடன் விளையாடுமதியமே யம்புலியாடவாவே, யம் பலவருடன்மருவு சிவகாமவல்லியுட னம்புலியாடவா வே. (சு)

முழுமுகத்திங்களொடு நெற்றியொருபாதிமதி முக்க ணிலோர்தோற்றுமதியா, முடியிலொருகீற்றுமதி யடியி லொருகீற்றுமதி முக்கீற்றுகீற்றுமதியாள், கொழுநகை ப்பிறையுமிரு பதுநகப்பிறையினொடுகொத்துமுத்துப்பி றையினுள், கும்பிடுந்தாமரைகள்குவியுமிசையமுதொ

றேகு குமுதங்கள் முகைகவிண்டிடும், பாதநகனும்வெண் டிகள் வடிவாகிவள்வடிவெலாம் பசுபாசவிருளகற்றும், பதியெனும்பரிதியொடு கூடிக்கலந்திடும் பலகோடிசந் திரகலையே, அழிவிலாப்பெண்பிள்ளை வடிவாகியங்குநா மம்புலிபாடவாவே, யம்பலவருடன்மருவு சிவகாமவல் லியுட னம்புலியாடவாவே. (௫)

மயில்வடிவுகம்மன்னை வந்துவிளையாடலாம் வாராதி ராகுகேது, வந்தாலுமென்னபய மகன்வாகனத்துக்கு வலியதோரிரையதாகுங், குயில்வடிவுகொண்டதொரு கோதையைச்சேர்ந்திடுங் குற்றமும்பற்றறத்திடுங், கு றையாதுகலைகளுஞ் சயரோகவினைகளுங் கூறுமுப்பார்க ளையுமுடனும், வெயில்வடிவினைச்சேர்ந்த சோபமுந் தீர்த்திடும் வெண்டியவரங்கள்பெறலாம், விரிசனைமித் தைதவிர் தெரிசனைமுத்தியும் வெற்றியும்பெற்றுவரலா ம், அரிவ்வடிவுகொண்டமுக் கண்ணியிவள்விளையாட வம்புலியாடவாவே, யம்பலவருடன்மருவு சிவகாமவல் லியுட னம்புலியாடவாவே. (௬)

ஏகாமலேனத் துடர்ந்துவருகின்குலத் தெழிலாச ரனமுடனே, யேறிவருபுரவியுஞ் சிவகங்கைமூழ்கியே யினியபொன்னிறமானதும், போகாதவெண்குட்ட மது போகவடிவெலாம் பொன்வடிவுதானுகியே, பொன்மகு டகவுடதே யக்குரிசில்பெற்றதும் புவிதனிற்கண்டதிலை யோ, மோகாவிகாரத்தின் முதிவானகோபத்தின் முன் னிட்டசாபத்தையு, மூளாதொழிக்கலா மாளாவரம்பெ ற்று முற்றுமேவாழலாகும், ஆகாதகின்கட் கருங்குட் டமுந்தீரு மம்புலியாடவாவே, யம்பலவருடன்மருவு சி வகாமவல்லியுட னம்புலியாடவாவே. (எ)

பச்சைமால்பஞ்சசய னத்தின்மேல்நீவெண்ப ர மெனவிருந்ததிலையோ, பங்கேருகக்கடவுள் சொன்னப டிகேட்டுநீ பகலிரவுதிரியவிலையோ, கச்சையாய்நச்சர வினைப்புனையுமுன்மத்தர் காணப்படாதுன்னையே, கற் றைச்சடைச்சக் களத்திமுத்தத்தில்நீ காத்துக்கிடக்க விலையோ, இச்சையாயண்டங்க ளெல்லாம்பெரும்பிள்ளை யினிதுவிளையாடநின்னை, யிங்குவாவென்னவே ய ங்குநீவாரா திருப்பதுவுமேழைமதியோ, அச்சமோகிறு வமோ யிவளில்நீமிச்சமோ வம்புலியாடவாவே, யம்ப லவருடன்மருவு சிவகாமவல்லியுட னம்புலியாடவாவே.

சுந்தரக்கடவுளாற் சூடுண்டமன்மதன் சுடர்முனிக் குடையானநீ, தொண்டுபட்டடையார் புரஞ்சுட்டிடப் பண்டு சுழல்கின்றதேர்வண்டில்நீ, கந்தரத்தேவர்கின் றுமிழ்கின்றசக்கைநீ காலினூற்றேய்ப்பட்டநீ, கைச்ச ட்டுவத்தினுல் வெட்டுண்டவாவுண்டு கக்கிட்டவுச்சிட் டநீ, மந்தரக்கிரியான மத்தொடுந்தேய்ப்பட்டு வாரியிற் கடைபட்டநீ, வாவென்றுநின்னையொரு பொருளாய ழைப்பதுவும்வாராதிருப்பதென்னே, அந்தரத்தினிலொ ளித் தாலுமுனைவிடுவரோ வம்புலியாடவாவே, யம்பல வருடன்மருவு சிவகாமவல்லியுட னம்புலியாடவாவே.()

இதழ்மடித்தெயிறுதின் றெழுசினத்தரசுட னிருப் ளவிலொருபிளவுசொன், றிடியெனப்பிளிறியிடு பொழ் யெனத்திண்டாட வேனயப்பிளவுசென்றே, கதழ்சகத திரமுடிக் கொடியகட்செவிதின்று காளமேகப்பீலிவா ன், கங்குலினெடுத்தாடவேலெடுத்தாடுமொரு கந்தண் வன்மைந்தனுகுஞ், சதமுறுவழக்கிலா யிரகோடியண்

டங்க டவாழுமவெண்டிங்கண்மூற்றுங், தணடாதுவருமமிமை கண்டானுனக்குராதி தாவாமதியுண்டாகுமே, அதிகமுறுமண்டத்து மதிகள்வருமுன்னமே யம்புலியாடவாவே, யமபலவருடன்மருவு சிவகாமவல்லியுடனம்புலியாடவாவே. (௰)

அம்புலிப்பருவமுற்றிற்று.

---

உ

சிவமயம்.

## சிற்றிற்பருவம்.

அடிமுடியுமாயிரத் தொட்டுமொற்றுச்செம்பொனமுகுறச்சுவரியற்றி, யட்டதிக்குங்கால்கணட்டுநெடுமேருநடு வசையாததூணிறுத்தி, இடையிலறைவீடுபதினுலெணவகுத்துமுகடினியசெம்பொற்கற்றையிட்டெடமுகுதிரைகட்டியிர வுமபகலுமெரியவே யிருவிளக்கேற்றிவைத்துப், படியிலகுபதவிப் பழங்கலமடுக்கிவிளை பச்சைநெலவிருநாழியிற், பல்லுயிருமுண்டுதேக் கிட்டுமடுக்களைப் பலவடுப்புஞ்சமைப்பத், திடமருவுபெருவீடு கட்டிவிளையாடுமுமை சிறுவீடுகட்டியருளே, சிவகாமசுந்தரி யெனும்பெரியவிமலையே சிறுவீடுகட்டியருளே. (௧)

மண்வைத்துகால்வைத்து தூணிறுற்சுவர்வைத்து வலியகைம்மாமும்வைத்து, வாசலொன்பதுவிட்டுமோட்டுவெளிபக்கத்து வளிவரிச்சலுநரம்பாற், பண்புற்றிடக்கட்டி மேலெலாந்தோலுடன் பலமயிர்க்கற்றை

யிட்டுப், பழவினைச்சேர்கட்டி யின்பதுன்பங்களுவ
பார்த்துளவிளக்குமேற்றி, எண்பத்தான்குநூ றாயிரம்
பேதமா யினியசிறுவீடுநோறு, மெய்வுயிர்களுங்குடி யி
ருந்துவிளையாடவே யின்னறுமறித்தறிந்துத், தின்பெ
ற்றபலவீடு கட்டிவிளையாடுமுமை சிறுவீடுகட்டியரு
ளே, சிவகாமசுந்தரி யெனும்பெரியவிமலையே சிறுவீடு
கட்டியருளே. (௨)

ஆறுசாஸ்திரநாலு வேதமதின் றுறைக மங்களிரு
பத்தெட்டுட, னைம்பெரும்பூதங்கள் பதினெண்புராண
ங்களரியசிறுதானுத்திரம், எழுகலையறுபத்து நாலுவ
கைமாநாட்டி. யெழுபத்திரண்டாயிர, மெழில்வரிக்கட
ஞ்ஞி புவனமிருநூற்றெட்டு மிருபத்துநா லுகபலங்கூ
றுமேதாள் ஞானற்று, தத்துவம்பல்கணிகள் குப்பமொ
ன்பதுவாசலுங், குலவுசிற்றேறரிரு பத்தோராயிரமு
டன் கூறுமறுநூறுமாகத், தேறுமொருவீடுகட் டிக்கு
டியிருக்குமுமை சிறுவீடுகட்டியருளே, சிவகாமசுந்தரி
யெனும்பெரியவிமலையே சிறுவீடுகட்டியருளே. (௩)

வருதேருருட்டிவரு பேய்த்தேரையொத்தபெரு
வாழ்வைக்குறித்துலகெலாம், வலசாரியிடசாரி வருமி
ந்திரன்றேரும் வளர்துளிதபடலமாக, உருதேருருட்டி
வரு மறுதேரிலாதண்ட மோராயிரத்தெட்டுமே, யொ
ருகுடைக்கீழாகு மேலாகுதேவர்களு முருவுசிறுதூ
ளாகவே, எருதேருருட்டிவரு சந்திரசூரியர்தேரு மெ
ழுதூளிபடலமறைய, விந்திரஞாலத்தே ருருட்டிவருசூ
ரனுட லிருபிளவுதானகவே, சிறுதேருருட்டிவரு சிறு
வணைப்பெறுமிறைவி சிறுவீடுகட்டியருளே, சிவகாமசு
ந்தரி யெனும்பெரியவிமலையே சிறுவீடுகட்டியருளே. ()

சித்தமகிழ்ச்சியின் மூவர்விளங்கிடு சிற்றிலிழைத்தவ
ணீ, சிருட்டி முதற்றொழி லாகமிகழ்ந்திடு சிற்றிலிழை
த்தவணீ, சித்தர்தயித்தியர் தேவருறைந்திடு சிற்றிலி
ழைத்தவணீ, சிற்றுயிரைக்கொடு காலன்வணங்கிடு சி
ற்றிலிழைத்தவணீ, சித்தெனமுச்செக மாயைதெளிந்
திடு சிற்றிலிழைத்தவணீ, சிக்கறநற்சிவ லோகம்விளை
ந்திடு சிற்றிலிழைத்தவணீ, சித்தியுமுத்தியு மாகிநலங்கி
ளர் சிற்றிலிழைத்தவணீ, சிற்சபையிற்சிவ காமசவுந்த
ரி சிற்றிலிழைத்தருளே. (௮)

பச்சைமடக்கிளி பச்சிழைபைந்தொடி பச்சைமயி
ற்பேடைப், பச்சிளநீர்த்தன பாரவிளங்கொடி பச்சை
மடப்பிடியே, அச்சுதனுக்கிளை யாய்களவின்கதி யைச்
சிறுமொய்க்குழலா, யச்சிவனச்சொடு தேர்பொடிசெ
ந்திடு மச்சுதனைப்பெறுவாய், வச்சிரவச்சுரன் மார்புபிள
ந்திடு வச்சிரவச்சிரவேல, வச்சிரகற்புனை தோளுடை
மைந்தனை வச்சிரமெனப்பெறுவாய்ச், செச்சைமலர்ச்
சிறு பாணிவருந்திட சிற்றிலிழைத்தருளே, சிற்சபையி
ற்சிவ காமசவுந்தரி சிற்றிலிழைத்தருளே. (௯)

எத்தனைகால மிருந்திடவிப்பாழ் மிப்படியெத்தனை
யோ, வெத்தனைகோடிகல லணை மேபற்றினையெத்தனை
சிற்றிலிறல, அகசனைசித்ர ரூ மோபாடிவளைந்துமு னத்
தாழித்தனரா, மக்கிரபதுவ ராயபாதங்குண மப்படிகி
ற்கிலேயால, உத்தமிபத்திரி யாசிட மபுரி யுற்றிடுகற்பு
டையா, யற்பவமைத்திடு பாணிவருந்திய முற்றிடு
பொற்றுகளாற், சிதசிரமிந்திர மாகவளமபொறு சிற்றிலி
ழைத்தருளே, சிறசபையிற்சிவ காமசவுந்தரி சிற்றிலி
ழைத்தருளே. (௰)

சிற்றிற்பருவம்-முற்றிற்று.

சிவமயம்.

# பந்தாடற்பருவம்.



சந்திரசூரியர்தமைச் சில்லெறிந்தாடிவளை சக்கிரவாளக்கிரிதனைச், சக்கரமதாகவே ராகுகேதுக்கயிறு தான்சுற்றிவிளையாடியே, அந்தரத்தாரா கணங்கழற்காயாக வாடிமகமேருகிரியை, யம்பரத்தினிலாடு பம்பரமதாகவே யாயிரம்படமாடுறும், விந்தைமாணிக்கநற் கயிறுகொடுவிளையாடி வெள்ளிவேதண்டமொழிய, மேலெண்டிசாமுகமு மூதண்டகூடத்தும் வேதண்டமத்தனையுமே, மூந்துவிளையாடிவரு மைந்தனைப்பெறுமிறைவி பந்துவிளையாடியருளே, பங்கயச்சிவகாமி சுந்தரியென்னமைமையே பந்துவிளையாடியருளே. (க)

செந்தாமரைப்பதம் பந்தசைந்தாடவரு திருமுழந்தாட்பந்துமே, திண்புவிபதிந்தாட வினியபந்துக்கொண்டை சென்றுடன்பந்தாடவே, நந்தாதகுங்குமக்கொண்டைபந்தாடவிரு நயனங்களங்காடவே, நவமணியிழைத்தகுழை செவியிலம்பனையாட நட்சத்திரமாலையுடனே, சந்திரசூரியர்சுட்டி யூசலாடப்பணிகள் சதுரங்கம்விளையாடவே, சதகோடிசிலதியர்கள் புடைசூழநவகோடி சத்திபருடன்கூடியே, பந்தாடவேதண்ட மூதண்டகூடநற் பந்துவிளையாடியருளே, பங்கயச்சிவகாமசுந்தரியென்னம்மையே பந்துவிளையாடியருளே. (உ)

முத்திபெறுமூதண்ட கோளபாதலமளவு முறுசிற்றில்விளையாடல்போல, முட்டைதனில்வித்தினில் நயப்பதநிலத்தினில் முளைத்தளவிலாதபேதந், தத்துவனவூர்வன தவழ்ந்திடுவநிற்பன தனித்தனிபறப்பனவுவே, சக்தொடுநடப்பன கிடப்பனவிருப்பன தருக்கொடுமுரு

க்கிளெளியா, வித்தைதயதுதுய்த்திடுவ தொத்துவனதத் துவன வித்தனையிசைத்துமதியா, விப்படிவகுத்தபல செப்பிடவின்யாரும லென்றுமோமாதிமாறிப், பத்திபெ றுபல்லுயிர்ப் பந்தடித்தாடுமுமை பந்துவிளையாடியரு ளே, பங்கயச்சிவகாம சுந்தரியென்னம்மையே பந்துவி ளையாடியருளே. (௩)

செங்கைச்சிவப்பிறுற் பவளமணிநிறமெனத் திரு மேனியொளிதவழவே, செம்பவளநிறமெலாம் பச்சை நிறமாகவே திகழ்நீலவரிவிழியிருெல், அங்குரநுநீலநிற மாகித்திரும்பிமணி யதாச்சிவப்பேறிநீ, யதுகண்டுநகை புரிய வெளுவிவெண்டரளவடி வாகியேபாடியிலடிபட்,டு ங்குகின்கோடியிரு குங்குமக்கொங்கையிற் கூடிப்பொ ன்னிறமுமடியே,* பொளிருாளகப்பந்தி யருகிலெறியப்ப ந்து முறுகறுப்புத்திடவே, பங்கயக்கடவுள்வெண் மு த்திறுற்றைத்தபொற் பந்துவிளையாடியருளே, பங்கய ச்சிவகாம சுந்தரியென்னம்மையே பந்துவிளையாடிய ருளே. (௪)

பிடித்திடுங்கிள்ளையும் பிறழுமயிலன்னமும் பிள்ளை காகணைவாய்ப்புளும், பெரிதுநகைகண்டுபா வவொக்கினி யகண்டனை பிறக்குமெலவேப்பறக்க, அடித்திடுங்கந்து கங் கண்டுசக்கரவாக மஞ்சிப்பறந்தொளிக்க, வஞ்சன விழிக்குகிக நானசஞ்சரிகமுட னொளிநிகழ்சகோரம் வெருவப், பொடித்தெழுங்குங்குமக் கொங்கைநிகரெ ன்றுநீ புகல்கின்றதென்னையென்றும், பூந்தளவுநகைசெ ய்து காந்தளங்கையிறுற் பொற்கட்டடிப்பதெனவே,*ப டித்தலந்தன்னிலெதிர் நின்றுபாங்கியருடன் பந்துவிளை யாடியருளே, பங்கயச்சிவகாம சுந்தரியென்னம்மையே பந்துவிளையாடியருளே, (௫)

வேறு.

கொங்கை வெற்பென வேயசைந்து குலுங்குமுத் தெனவே, குங்குமச்சிறு வேர்வைசிந்திட நொந்துசிற் றிடையே, தங்குபொற்கொடி போல்நுடங்கிய வங்க ண்மைக்கயலே, தங்காற்குழை மேல்மறைந்திட வந்து பொற்பிடர்மேற், கங்குன்மைக்குழ லேசரிந்திட மங் கையர்க்கரசே, கந்தரக்குர லோசையிங்கித சங்கிதத் துடனே, பங்கயத்திரு வேவிளைந்திடு பந்தடித்தருளே, பங்கயச்சிவ காமசுந்தரி பந்தடித்தருளே. (சு)

கண்செவிக்குழை யாளர்கண்டொளி கண்பசப்பு றவே, கண்கறுப்புறு வார்குடங்கை கடுஞ்சிவப்புறவே, தண்சுடர்ச்சிறு பாடகங்கள் சதங்கை யொற்றிடவே, சண்பகப்புது மாலைசிந்திட வண்டொலித்திடவே, எண் சொலிச்சொலி மாறியங்கை யிரண்டுமுற்றிடவே, யெ ஞ்சுசிற்றிடை நானுடங்க விருந்துபொற்புடவே, பண் சொலிச்சிறு தாளமொற்றிடு பந்தடித்தருளே, பங்கயச் சிவ காமசுந்தரி பந்தடித்தருளே. (எ)

பஞ்சகிர்த்திய மேவிளைந்தவர் பங்கினிற்பவளே, பஞ் சவர்க்கொரு தூதர்சென்றவர் தங்கைநற்பனையே, ப ஞ்சவத்திர சோதியந்தரி மந்திரப்பொருளே, பஞ்சலட் சண காவியம்புக லஞ்சனக்குயிலே, பஞ்சரக்கிளி பா ணிகொஞ்சிய வஞ்சிநற்கொடியே, பஞ்சரத்தெழு கீத ம்விஞ்சுவி பஞ்சவித்தகியே, பஞ்சையொற்றிடு பாதசு ந்தரி பந்தடித்தருளே, பைங்தொடிச்சிவ காமசுந்தரி பந் தடித்தருளே. (அ)

பந்தனைப்பணி தீரவந்தவள் பந்தடித்தருளே, பைந்த மிழ்ப்புலி யூருறைந்தவர் பந்தடித்தருளே, பந்தினைத்த

ன பாராமுந்தரி பந்தடித்தருளே, பைந்தளிர்த்திரு மேகி யம்பிகை பந்தடித்தருளே, பந்தமற்றவர்பாணியம்பிகை பந்தடித்தருளே, பந்தரிட்டுல கேழுநின்றவள் பந்தடித் தருளே, பைந்தருக்கிணை யானசங்கரி பந்தடித்தருளே, பங்கயச்சிவ காமசுந்தரி பந்தடித்தருளே. (௯)

பைம்பொன்முத்தணி சோதிதந்திடு பந்தடித்தருளே, பஞ்சரத்தின மேடுனைந்திடு பந்தடித்தருளே, பண்புவை த்திம வான்வழங்கிடு பந்தடித்தருளே, பங்கினிற்சுயமே பிறந்திடு பந்தடித்தருளே, பண்டுநற்பசு பாசம்வந்திடு பந்தடித்தருளே, பஞ்சகிர்த்திய மேவினைந்திடு பந்தடித் தருளே, பஞ்சசத்திநல் வாமியந்தரி பந்தடித்தருளே, பங்கயச்சிவ காமசுந்தரி பந்தடித்தருளே. (௰)

பந்தாடற்பருவம-முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# பொன்னூசற்பருவம்.

பின்னூசலாடமுகி லளகாடவிக்கருகு பிறழ்மகரகு ண்டலங்கள், பெரியவள்ளைச்செவியில் மதிபருதிபோல ப் பிறங்குசிற்றூசலாட, மன்னூசலாடமுத் தாரமாட க்கொங்கை மலைமீதிலுடுவென்னவே, வட்டமிடுபச் சைசவி யிரட்டைவரிவில்லென வாருவலயங்களாட, எ ன்னூசலாடும்வினை தன்னூசலாடாம லிருபாதகமலத திலு, மினியதமனியமிழைத் தணியுநூபுரமாட வெழி லொடுகலாபமாடப், பொன்னூசலாடும்விடை மின்னூ சலாடவே பொன்னூசலாடியருளே, பொன்னம்பலச் செல்வி சிவகாமவல்லியே பொன்னூசலாடியருளே.()

செறியுமலரிடைவண்டு தேனுண்டுமீண்டுந் திரும்பி திரும்பிவரல்போற், றீவினையுநல்வினையும் வந்துவந் தேபோய்த் திரும்பித்திரும்பிவரல்போல, அறிவுடைமை ம்பொறிதோறும் வீழாமல்விடயத் தடித்தடித்தோடிவ ரல்போல், அங்கோடுமிங்கோடும் வந்தோடுமுயிர்கள் போ லல்குலிடைபிங்கலைகள்போல், எறிசுடர்விளக்கு வின் மணிபலகையாகவுல கிடையான வடமேருவு, மி ரசதக்கிரியுநடு தூணாகவண்டமுக டேறுமுத்திரமாக வே, பொறியரவினுக்கரசு மாணிக்கவடமான பொன் னூசலாடியருளே, பொன்னம்பலச்செல்வி சிவகாமவ ல்லியே பொன்னூசலாடியருளே. (௨)

இரவுபகல்மதிபருதி பெரிதூசலாடவுயி ரெழுவகைப் பிறவிதோறு, மினியசிற்றூசலா டப்பஞ்சபூதங்க ளெ ங்குநின்றூசலாட, நரகொடு சுவர்க்கத்தி லுறுபோகபு வனத்தில் நாடுமுயிரூசலாட, நல்வினைகள் தீவினைக ளின்பமொடுதுன்பங்க ளூடோறுமூசலாட, விரவுமும் மூர்த்திகளு முத்தொழிலுமெக்காலும் வீடாமலூசலா ட, வீடுதருமணிமன்றுள் நாடகங்கண்டவர் விமானங்க ளூசலாடப், பொருவில்மனமீசன்முக் கண்ணூசலாட வே பொன்னூசலாடியருளே, பொன்னம்பலச்செல்வி சிவகாமவல்லியே பொன்னூசலாடியருளே. (௩)

மின்சொரிபசும்பொன் விமானத்தின்வருமகளிர் வி றலியொனக்குழுமியே, விளரியாழிசைமூரல் மருவுசல் லரிமுழவு விஞ்சைமெல்லியரிரட்டக், கொன்சொரியு ம்வேல்விழிப் பஞ்சியடிவஞ்சியிடை கொஞ்சுகிளி யஞ் சொன்மடவார், குமரிமயிலென்னவரு கவரிபணி மாற வே கோடிசிவசத்திபருடன், தென்சொரிபசும்பாகு வி ளைகிளவிமங்களஞ் சிலதியர்கள்பலகூறவே, சிற்றுலவ

ட்டவிசிறிப்பாரி சாதமலர் சிதறிபங்கீர்த்தூவவே, பொன்சொரிபசும்பாவை புதியபொற்பூவையே பொன்னூசலாடியருளே, பொன்னம்பலச்செல்வி சிவகாமவல்லியே பொன்னூசலாடியருளே. (சு)

அன்னையே தாயேயென் மாதாபிதாவேயென் றாவியேபூவில்வாழு, மன்னமேயென்னமே யின்னமொருகருமத்தி லலையாமலென்னை வைத்திடும, மன்னுநீ முன்னுநீ பின்னுநீயல்லாது மற்றுமொரு தெய்வமுளதோ, மற்றேதியார்பஞ்ச கர்த்தாவையும்பெற்ற மாதாவுநீயல்லவோ, கன்னியேகுமரியே கன்னிகாரத்திற் களித்தவிருகொங்கைமயிலே, கன்னலேமின்னலே யுன்னுவோர் முன்னில்வரு கருணாகரக்கௌரியே, பொன்னிரும்பு விசைவாழ் பொன்னிறப்பூவையே பொன்னூசலாடியருளே, பொன்னம்பலச்செல்வி சிவகாமவல்லியே பொன்னூசலாடியருளே. (ரு)

வேறு.

நாறுபூமலர் விடாதூங்தவனம வாடைவீசவொருபால், நாளிகங்குவளை யாறுவாணிபொதி யோடைவாவியொருபால், ஆறுபோலவிளை சாறுபொங்கிபதி யாலைபாயவொருபால், ஆறுவாலகிறை சாலிபொன்சொரியவாறுபாயவொருபால், வீறுசோலைதொறும வீழுநன்கனிகள் வேரிபாயவொருபால, மேவுசேறுழுதுநாறுகொண்டுநடு வேலைவேலியொருபால், ஊறுகேணியுடை குழ்சிதம்பரிபொன் னூசலாடியருளே, யோதுமவேதசிவகாமசுந்தரிபொன் னூசலாடியருளே. (சா,

ஊழியூழிதோறும வாழ்சுமங்கலிபொன் னூசலாடியருளே, யூர்விமானம்வரு வாமசுந்தரிபொன் னூசலாடியருளே, ஓவில்மோனசிவ யோகர்நெஞ்சகிபொன்னூ

சலாடியருளே, யூறுதேனெழுகு வாசமஞ்சரி பொன் னூசலாடியருளே, ஓடியோடியொழி யாதுவந்திடுபொ ன் னூசலாடியருளே, யோடைசூழ்புலிசை வாழுமம் பிகைபொன் னூசலாடியருளே, ஒதொணுதபர லோக சங்கரிபொன் னூசலாடியருளே, யோதும்வேதசிவ கா மசுந்தரிபொன் னூசலாடியருளே. (எ)

காசுலாவியகலாபகஞ்சுகிபொன்னூசலாடியருளே
காரிமாரிகவுமாரிதந்திடுபொன்னூசலாடியருளே
வாசமேபுலிசையூரில்வந்தவள்பொன்னூசலாடியருளே
மாசிலாதமணியானவங்கணிபொன்னூசலாடியருளே
பாசமானதுவிமோசனந்தருபொன்னூசலாடியருளே
பாரிசாதமணம்வீசுகொந்தளிபொன்னூசலாடியருளே
ஊசலாடும்வினைதீரவந்தவள்பொன்னூசலாடியருளே
யோதும்வேதசிவகாமசுந்தரிபொன்னூசலாடியருளே.()

ஆதிபோதனியனுதியஞ்சனிபொன்னூசலாடியருளே
யாரவாரவதிகாரசங்கரிபொன்னூசலாடியருளே
நீதிநூனெறிவழாதிசைந்திடுபொன் னூசலாடியருளே
நீலலோசனிவிலாசமஞ்சனிபொன்னூசலாடியருளே
நாதகீதநவரீதரஞ்சகிபொன்னூசலாடியருளே
ஞானதேசிகபிஞகிநெஞ்சகிபொன்னூசலாடியருளே
யூகநாதன்மகிழாதியம்பிகைபொன்னூசலாடியருளே
யோதும்வேதசிவகாமசுந்தரிபொன்னூசலாடியருளே.

காதுலாவுகுழைமேதாளிவந்தொளிர் பொன்னூசலா டியருளே, காரபாரகுழல்சூழும்வண்டுகள்பொன் னூச லாடியருளே, மீதுலாவுமதுமாலைமஞ்சரிபொன் னூசலா டியருளே, வீசுசாமரைகள்மூசும்வெண்டிகை பொன் னூசலாடியருளே, பாததாமரையினூபுரங்களொலி யூ சலாடமிகவே, பாவியேனுனதுபாதம்நம்பி மனமூசலா டமுதுநீர், ஓசைசேர்புலிசை வாழவந்தவள்பொன் னூ சலாடியருளே, யோதும்வேதசிவகாமசுந்தரிபொன் னூ சலாடியருளே. (ய)

பொன்னூசற்பருவம்-முற்றிற்று.

உ

சிவமயம்.

# குதலைமொழியாடற்பருவம்.



முழுமதியினமுதமுந் தெண்டிரைப்பாற்கடலின் முன்கடைந்திடுமமுதமு, முத்திதருமோவதனை யொப்பெனவுரைத்திடினு முக்கனிசருக்கரையொடும், பழுதகல் பசுந்தேனு மிருவினைக்கின்பமயபயக்குமோகாமதேனின், பாற்சுவையினுற்சுவைக் கொஞ்சுகிளியின்சொலும் பாச்சிருணீக்கிவிடுமோ, வழுவகலுமிம்மைக்கு மறுமைக் குமுத்திதரு மற்றினியுரைப்பதென்னோ, மைந்தர்தஞ் சொற்கேழ்க்கி லின்பஞ்செவிக்கெனும் வாய்மையும பொய்மையாமோ, குழலினிதுயாழினிது மன்றுநின்பவளவாய்க் குதலைமொழியாடியருளே, குழகன்மகிழ்சிவகாம சுந்தரிநின்மழலைவாய்க் குதலைமொழியாடியருளே.

சூக்குமைவிளங்குபை சத்திமற்றிவையொடு துலங்குவைகரியாகியே, சொல்லருமிலஞ்சிய ரொடுகண்டமுச்சியொலி துடர்நாசியொடுகலந்தே, வாக்கினிலெழுந்துபல வணலமிழ்தநாவினில் வழங்குமழலைச்சொல்லுமேல, மைந்தனைக்கண்டுகேட் டுண்டுபார்த்தின்பமு மாதாபிதாவுமெய்தும், பாக்கியந்தரவந்த மாதாபிதாவுநீ பரவுமெனகுலதெய்வநீ, பழுதகலுமுயிருநீ யுடலுநீயுடலினிற் படருமைமபுலனுநீயே, கூக்குரல்குயிற்பூவை கொஞ்சுகிளியஞ்சுநின் குதலைமொழியாடியருளே, குழகன்மகிழ்சிவகாம சுந்தரிநின்மழலைவாய்க் குதலைமொழியாடியருளே. (௨)

குதலைமொழியாடற்பருவம்-முற்றிற்று.



# பாவைவிளையாடற்பருவம்.



வல்லதெய்வப்பாவை மாகிடப்பாவையொடு வாழ்விலங்கின்பாவையும், மறிதிரைப்புனலிடை வழங்கிடுப்பாவையு மருவுபறவைப்பாவையும், ஒல்லையினெளிந்துதா

மூர்த்திடும்பாவையு முறுதாபரப்பாவையு, மொருபொறிப்பாவைமுதலைம்பொறிப்பாவையா யுற்றிடும்பாவையெல்லாம், எல்லவேசாக்கிரங் கனவொடுசுழுத்தியுடனெழுபூதசாரவடிவா, யெண்பத்துநாலுலட் சத்தானகொள்கையினி லெண்ணிறந்திடுகோலமும், பல்லுயிர்ப்பாவைவிளை யாடுநற்பூவையே பாவைவிளையாடியருளே, பரமசிவகாமசுந் தரியம்மையினியபொற் பாவைவிளையாடியருளே. (க)

கன்னியின்மணத்திற்றில் விளையாடும்போதுமுக் கண்ணிதேவியெனவுங், கடவுள்மணவாளனென மணமாலைசூட்டவுங் கமழ்சட்டுவெப்பழக்கி, இன்னமுதமூட்டியே பிள்ளையெனமாற்றிடு மேனையிற்றாலாட்டியு, மெமதுபெராட்டிநீ வீணழற்பாவியென விருகையினுலெடுத்து, மன்னும்விழிநீர்துடைத் தூறுபாலுண்ணுகென மணிவாயின்முத்தமிட்டு, மார்பத்தெடுத்தணைத் துப்பால்கொடுத்தயலின் மற்றுநாணிக்கவிழ்த்தும், பன்னருஞ்சேடிய ருணைக்கூடிமேவுபொற் பாவைவிளையாடியருளே, பரமசிவகாமசுந் தரியம்மையினியபொற் பாவைவிளையாடியருளே. (உ)

நாடருஞ்சர்ப்பபூ ணணிசெம்பொன்மாலையுட னவமணியணிந்தபாவை, நவபெரும்புவனங்கள் முழுவதுந்தன்வச நடத்தவேவந்தபாவைக், கூடருங்குடிலையுங் கூடவந்திடுபாவை குவலயத்ததிசயமெனுக், கொல்லியம்பாவையுங் கும்பிடுபசும்பாவை குலவுபல்லுயிர்கட்கெலாம், வீடருங்கற்றா யெனுஞ்சித்திரப்பாவையும் விந்துமோகினிமானுமே, மேவுதன்வடிவமென வேவிளங்கிடுபாவை யெய்ப்பொருளினைப்பரவுவோர், பாடவந்தவர்சித்தி முத்திவடிவானபொற் பாவைவிளையாடியருளே, பரமசிவகாமசுந் தரியம்மையினியபொற் பாவைவிளையாடியருளே. (௩)

பாவைவிளையாடற்பருவம்-முற்றிற்று.

உ

சிவமயம்.

# கழங்காடற்பருவம்.



பாந்தள்மாணிக்கமணி பொற்பூவின்மரகதம் பந்திபா
ய்ந்தாடலெனவும், பைந்தாமரைப்பொகுட் டுறுகுறுங்
கொன்றைநிறை பாய்ந்துவிளையாடலெனவும், மாந்தளி
ரின்மிசையோடி வந்துவந்திளமாவின் வடுவசைந்தாட
லெனவும், மழைமதரரிக்கண்கள் பல்கணிகொப்பின்
மறிந்துவிளையாடலெனவுஞ், சாந்திளங்கொங்கைமேனி
ன்கணவர்கண்சுடாந் தாவிவிளையாடலெனவுந், தண்டா
துவரிவண்டு செங்காந்தண்மலர்மீது தண்டாதுநுகர்வ
தெனவுங், காந்திதருசெம்பொனிழை யிந்திரநீலக் க
ழங்குவிளையாடியருளே, கநகசிற்சபையில்வாழ் சிவகா
மசுந்தரி கழங்குவிளையாடியருளே. (க)

பழகுசொற்பச்சிளங் கிள்ளையொடுகொஞ்சியும் பஞ்
சரமவளர்க்கத்துறும, பஞ்சிறைப்பூவைக்கு மென்மொ
ழியயிற்றியும்பன்மணியிழைத்தபடிவக், குழாமணப்பிள்
ளைகொடு வண்டில்விளையாடியுங் குங்குமச்சேறாடியுங்,
கொங்கையாழ்குரலிசை நரம்பினொடுபாடியுங் குருமல
ர்ச்செண்டாடியும், அழகுபொலிபேரான வெள்ளத்தில்
விளையாடி யணிசுண்ணநீராடியு, மன்னத்தினீலக் கலா
பமயின்மேலுற் றமர்ந்தேறிவிளையாடியுங், கழகுமுத்த
மிழ்பாடு மிகுளையரொடும்பொற் கழங்குவிளையாடியரு
ளே, கனகசிற்சபையில்வாழ் சிவகாமசுந்தரி கழங்குவி
ளையாடியருளே. (உ)

கழங்காடற்பருவம்-முற்றிற்று.



# அம்மானைப்பருவம்.



சந்திரசூரியரோரையதாய்த் தாரகணர்பதியாமுதா
ய்த், தருசுகள்சுருதிகடளுகத் தனவனைதபணியவனா

யாகச், சுந்தரவிருந்தாமெறிதரவே சுழன்றுசுழன்றிடவ லமவரவே, சுரிதருகூந்தலுமுகிலெனவே துலங்கிநுடங்கிடைமின்னெனவே, இந்திரவில்லெனும்புருவமிழைபணிமணிசொரிதுளியெனவே, யெங்கணுமதிவிழி சபலெனவே பெதிரிடுதண்ணடியெனவரவே, அந்தரியுலசிலிபாவமர்ந்த யம்மேயம்மானையாடுகவே, யரசேயரகரசிவகாமி யம்மேயம்மானையாடுகவே. (க)

வடிவும்பளபளவெனமாலை மணமுங்குமுகுமுவெனநீல, வரியும்மொகமொகவெனமுனைகை வளையுங்கிலுகிலுவெனவேபூ, முடியுந்தனையவிழதரமூரல முகமுமங்கிங்கிவெனமாரபின,முலையுந்தளதளவெனவாயின் மொழியுங்கலுகுலுவெனநூலின, இடையுமமினுமின லெனவாடையெழிலுந்தகதகவெனவோரை,யெறியுங்கலகலவெனவேதவிசையுமநமநமவெனநாவின,அடியுஞ்சிவசிவவெனவெங்களம்மமேபமம்மானையாடுகவே, யரசேயரகரசிவகாமி யம்மேயம்மானையாடுகவே. (உ)

அம்மானைப்பருவம்-முற்றிற்று.

# புதியநீராடற்பருவம்.

அடியிணைகளபுடவிதிக மணடமுகடளவுமே யட்டதிக்குப்புயங்க, ளலைகட லுடுத்ததுகில புடைபெயருமிருகண்க ளிபசந்திரசூரியா, வடசயிலைமகமேரு விருகொங்கைதாரகைகண மாரபணியுமுத்துமாலை,வாடையொடுமேகாடையுமாரியிடைபிங்கலைகள வழிவேலாநினவடிவமே, இடையிலீழுகிவிளையாடுதடமுணடென றெவாக்குமேபகலவரிதா,வெனருலுமண்டங்க ளெலலாமிதக்கவே விளிபநடனமபுரிந்தும, புடைபெயருமாநந்த வெள்ளத்திலாடுமுமை புதியநீராடியருளே, புநிகசிவகாமசுந்தரிமுதவாரியே புதியநீராடியருளே. (க)

கண்கள்கயலென்னக் கணைக்கால்வராலெனக் கைவிரல்கள்களிறென்னவே, கமழ்முழுந்தாளிணை களிக்குஞெண்டென்னவே கலைவடிவுகமடமெனவே, வண்களபநேர்களபமும் வெண்சங்கமெனவீசும் வளராசைமேல்வீசவே, மையிரவுசுருளோதி சைவலமதென்னவேவார்க்காதுவள்ளையெனவே, பெண்கள்மனமருளுமிரு கொங்கைமுகநகைமுகம் பெரியதாமரையென்னவே, பிரசவிதழ்குமுதமென வுரைசெய்தும்பிகளோடு பெடைவண்டுபுடைசூழலவே, புண்கொண்டுவேலனைய கண்கள்களிகொள்ளவிரு புதியநீராடியருளே, புநிதசிவகாமசுந்தரியமுதவாரியே புதியநீராடியருளே. (௭)

பாராடவேதண்ட வேராடமூதண்ட பகிரண்டகூடமாடப், பாதாளமாடவெகு வேதாளமாடமிகு பலசீவகோடியாடத், தாராடவரவுதலை மாலையாடச்சூடு தவளவெண்பிறையாடவே, தமனியப்பொதுவில்நின் றுடுநின்கணவனார் தலைமீதுநின்றுடுவள், சீராடிவிளையாடவவளுடன்கூடித் திளைப்பவேதுளையமாடிச், சித்தங்களித்துமுத் தாரவடமாடத் திரும்பிக்குடைந்தாடியே,போராடுகங்கையுட னுறவாடல்போலவே புதியநீராடியருளே, புநிதசிவகாமசுந்தரியமுதவாரியே புதியநீராடியருளே. (௮)

பாகீரதன்றந்த கங்கைப்பிரவாகம் பறந்துவருகின்றநாளிற், பவளவார்சடையொடு பிறைத்தோணிவிட்டுநம் பரமன்விளையாடலெனவே, ஏகாந்தமாகிய சுகாநந்தயோகத் திருந்துசிவபூசைபுரியு, மேகாம்பரந்தனிற் காமாட்சியம்மையு மேகம்பநதியாடல்போல், ஆகாயகங்கைசரஸ்வதியமுனைகாளுந்தி யதலபாதாளகங்கை, யண்டபகிரண்டங்க ளனுவெனமிதந்திடு மகாநிநதியதுவுமுன்பாற், போகாதகாவேரி யும்பெருகிவருகின்ற புதிய

நீராடியருளே, புகிதசிவகாமசுந் தரியமுதவாரியே புதிய நீராடியருளே. (ச)

நறுமலர்ப்பூங்கா வனந்தனிலெழுந்தருளி நாண்மலர் கடளிர்கள்கொய்து,நாடகக்கணிகைகிகர் கோலக்கலா பமயில் நடனங்களினிதுகண்டு,குறுநடைக்குமரிமட வன்னமொடுகூடியே குலவிமெல்லெனநடந்து, குயில்க ளொடுகூவியுங் கிளிகளொடுபேசியுங் குயில்சிறுகுறும் பிழைத்துஞ், சிறுபொதும்பரில்நின் றொளித்துவிளையா டியுஞ் சேடியருடன்கூடியுஞ், சிறுதும்பியம்மனை கழங் குடுதெள்ளேனமொடு சிவரிநீர்விளையாடியும், பொறிவறி ப்பாவைபொற் குரவைவிளையாடியும் புதியநீராடியரு ளே, புகிதசிவகாமசுந் தரியமுதவாரியே புதியநீராடிய ருளே. (ரு)

வேறு.

காலினிற்கிண்கிணி சிலம்புகளொலித்திடக் காஞ்சன மணிக்காஞ்சிக், கலையிரங்கிட வதரமும்வெளுப்பேறக் க ண்களுஞ்சிவப்பேறக், கோலக்குங்குமக் கொங்கைகு லுங்கிடக் கொடியிடை துடியாடக்,குலவுநீரிடைத்தோ ன்றியுந்தோழியர் குளித்தெதிர்விளையாடி, மாலைக்கூந் தலிற் சாந்தமுமேனியின் மான்மதங்கஸ்தூரி, வாடை கோடைநீ கலந்திடத்தான்முலை மணிக்குளத்தினினீந் தி, ஆலிக்குஞ்சில சேடியர்பலருட னுடுகபுதுநீரே, யா டலஞ்சிவ காமசுந்தரியுமை யாடுகபுதுநீரே. (சு)

நெருப்பிற்பூத்தபொற் பூந்தொடைமாணிக்க நீரிடை கிழற்றோ... நீரிற்பூத்தபொற் பூவினைப்பாரென்று நீரி டையவியாமல், விருப்பிற்செஞ்சுடர்க் கொழுந்துவிட் டெரிகின்றவிளக்கினைப்பாரொன்றும்,விழித்துக்கண்களை க்கெண்டைகள்மேய்கின்ற வியப்பினைப்பாரொன்றும், ப ருப்பதற்குயர் தாமரையரும்பெனப் பருமத்தைப்பாரொ ன்றும், பச்சைவெண்ணிறஞ்சிவப்பொடுபொன்னிறப்ப ந்தியாய்ப்புனல்கண்டே, அருப்பிற்கையுடைச்சிலதியர் சிருப்புற வாடுகபுதுநீரே, யாடலஞ்சிவ காமசுந்தரியு மை யாடுகபுதுநீரே. (எ)

பாங்கிற்றோன்றிடும பாங்கியர்வடிவெலாம் படியாற்
கலந்தோன்றும, படிவிளங்கிடு மொருவர்தாமிருவராய்
ப் பார்த்ததிசயங்கூறக்,கோங்கருமபிடை முல்லையினி
ளைத்திடக் குமிழுடன்குலைக்காந்தள், கூடிப்பூத்திட வ
ண்டுகளார்த்திடக் கோவையின்கனிதோன்ற, வாங்கில
ஞ்சியுங் காஞ்சியுமலர்ந்திட வஞ்சியின்கொடியாட, மயி
லுமன்னமுங் கிள்ளையுமபூவையும் வந்திடப்புனலூடே,
ஆங்குநின்பரமானந்தத்துறையினி லாடுகபுதுநீரே, யா
டலஞ்சிவ காமசுந்தரியுமை யாடுகபுதுநீரே. (௮)

குளித்துமூழ்கியு நீந்தியுமாழ்ந்திடக் கூந்தலுஞ்சரிந்
தோடக், குங்குமத்துட னலததகங்கலந்திடிற் குடைந்
திடும்புனலூடே,ஒளித்துநீள்கரை யேறியும்பாய்ந்துநின்
றொருவர்மேலொருவோரதா, முறுத்து வெண்புன வி
ரைத்துமேல்விசிறியுனுறுபெரும புனலூறுங், தெளித்து
மங்களம் பாடியுமாடியுஞ் சிலதியர் விளையாடத், திளைக்
குமேழ்கட லொருசிறுதுளியெனச்சிவானந்தப்பெருவெ
ள்ளம, அளிக்குநின்பெருங் கருணைபோற்பெருகநீ ராடு
கபுதுநீரே,யாடலஞ்சிவகாமசுந்தரியுமையாடுகபுதுநீரே.

வாழிவாழியென் றேத்திடக்கலைமகள் மங்களமபல
கூறி, வாழிவாழியென் றேத்திடத்திருமகள் மகிழ்வுட
ன்பலலாண்டு, ஊழிவூழியென் றேத்திடத்திருமகளுரு
த்திரையெனுந்தேவி, யுகந்துவாழியென் றேத்தியேவா
ழ்த்திட வொளிதிரோதானந்தை, தோழிமாருடன்வா
ழியென்றேத்திடச் சுபமனோன்மணி சத்திச், சூழ்ந்தும
ற்றுள சத்திகளியாவருஞ் சோபனமபலகூறி, ஆழிசூ
ழ்புவிசை வாழியென்றேத்திநீ ராடுகபுதுநீரே, யாடல
ஞ்சிவ காமசுந்தரியுமை யாடுகபுதுநீரே. (௰)

புதியநீராடற்பருவம்-முற்றிற்று.



ஆக பருவம்-௰ரு-க்கு-பாடல்-௱௨௰.